## ஜீவன், அனு–இரு சுட்டிகள் உங்களுக்கு அளிக்கும்:

# உலகத்தின் சிலிர்ப்பூட்டும் செய்திகள்!



உலகந்திலேயே மிக
வேகமான மிருகம் *சிறுத்தை*.
அது மணிக்கு 70 மைல்
வேகத்தைத் தொடுகிறது என்று
தெரிகிறது



உலகத்திலேயே நெடுந்தாண்
டலில் சாதனை செய்தது ஒரு
**கங்காரு**-தாண்டிய தூரம்
42 அடி! ஒலிம்பிக்
சாதனையை விட
12 அடி 3 அங்குலம்
அதிகம்.

உலகத்திலேயே மிகப் பெரிய
மிருகம் *நீலத் திமிங்கலம்*
– 106 அடி நீளமும்,
195 டன் எடையும் கொண்டது



உலகத்திலேயே மிக உப்புக்கரிக்
கும் கடல் *டெட் கடல்* என்பது.
ஜோர்டானுக்கும் இஸ்ரேலு
க்கும் இடையே உள்ளது.
இக்கடல்நீர் ஒருவர்
உட்கார்ந்தால் அமிழாத
அளவுக்கு கெட்டியானது.



உலகத்திலேயே மிக உயர்ந்த மரம்
கலிபோர்னியாவைச் சார்ந்த
*சிகோயா*. இதன் உயரம்
272 அடி, சுற்றளவு 30 அடி.
'ஜெனரல் ஷெர்மன்' என்ற
செல்லப் பெயர் கொண்டது



daCunha-LIC-90 TM

**ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் ஒன்றுதான் உங்கள் எதிர்காலத்தைப் பாதுகாக்க மிகவும் பத்திரமான நிச்சயமான வழி. அதைப் பற்றி அறிய முயலுங்கள்.**



**ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா**

அடுத்தது: ஜீவனும், அனுவும் ரகசியங்களின் தடத்தில்!

# அம்புலிமாமா

## கேமல்
## வண்ணப் போட்டி




நுழைவுக் கட்டணம் கிடையாது

பரிசுகள் வென்றிடுவீர்!
கேமல்—முதல் பரிசு ரூ. 15
கேமல்—2வது பரிசு ரூ 10
கேமல்—3வது பரிசு ரூ 5
கேமல்—5 ஆறுதல பரிசுகள்
கேமல்—10 சான்றிதழ்கள

புள்ளியிட்ட இடங்களில் வெட்டவும்

12 வயதுக்குட்பட்ட மாணவ மாணவியர் மட்டுமே பங்கெடுக்க முடியும். மேலுள்ள படத்தை ஏதேனும கேமல் வண்ணம் உபயோகித்து வண்ணம் தீட்டவும். வண்ணந்தீட்டிய படங்களை இம் முகவரிக்கு அனுப்பவும் P.B. No. 9928, COLABA, Bombay-400 005. முடிவுகள் தீர்ப்பானது. இதுபற்றிய கடிதத் தொடர்பு வரவேற்கப்பட மாட்டாது.

Name ------------------------------------ Age ----------

Address -------------------------------------------------

தயவு செய்து உங்கள் பெயர் மற்றும் முகவரியை ஆங்கிலத்தில் எழுதவும்.

Vision

**CONTEST NO.16**

தயவு செய்து முழுப் படத்தையும் பெயிண்ட் செய்ய வேண்டும்.

நுழைவுகளை இத் தேதிக்கு முன் அனுப்பவும் *30-9-1980*

# அம்புலிமாமா

செப்டம்பர் 1980

## பொருளடக்கம்




தனிப் பிரதி ரூ. 1-50. வருட சந்தா ரூ. 18-00.



# அம்புலிமாமா


நிறுவனர்: 'சக்கரபாணி'

நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி


---

விருந்திட்டு உபசரித்தல் ஒரு யாகத்தை செய்து புண்ணியம் அடைவதற்குச் சமம். விருந்தினர்கள் வரவர அவர்களை உபசரித்து உண்டி அளித்து அளவளாவுவது புண்ணியத்தை அதிகரித்துக் கொண்டு போவதேயாகும். இதனையே வள்ளுவரும்,

> **இணைத்துணைத் தென்ப தொன்றில்லை, விருந்தின்**
> **துணைத்துணை வேள்விப் பயன்.**

என்று கூறியுள்ளார்.

மூடர்களில் சில வகைகளை இந்த சமஸ்கிருத சுலோகம் கூறுகிறது.

> **அநாஹூதே ப்ரவேசஸ்ச்சா ப்யப்ருஷ்டே பஹு பாஷணம்**
> **ஸ்வா ஸ்துதிஸ்சாத்ம வர்ணஸ்ய இத்யேவம் மூர்க்க லக்ஷணம்**

அழையாத வீட்டில் நுழைவதும், கேட்காமலேயே தானே சொல்வதும், தன்னைத் தானே புகழ்ந்து கொள்வதும் மூடர்களின் சில லட்சணங்களாகும்.

---


**மதிமுகம்: 67 செப்டம்பர் 1980 புன்னகை: 3**

**தனிப் பிரதி: ரூ. 1-50 வருட சந்தா: ரூ. 18-00**




**ஜி. முரளி, நரசாபுரம்.**

கேள்வி : மொழிகள் எவ்வாறு உண்டாகின்றன? எழுத்து வடிவு பெறாத மொழிகளில் எப்படி கருத்துக்களை வெளிப்படுத்துகிறார்கள்?

பதில்: மொழி மனிதனின் கருத்துக்களை வெளிப்படுத்த உதவும் ஒரு சாதனமாகும். மனிதன் தான் பார்த்த பொருள்களையும் தனது செய்கைகளையும் தன் உணர்ச்சிகளையும் பிறருக்குக் கூற விரும்புகிறான். முதலில் கைகால்களை அசைத்துப் புரிய வைக்கிறான். அதில் வெற்றி பெறமுடியாமல் உரக்கக் கத்துகிறான். பிறகு குறிப்பிட்ட கருத்துக்களைக் கூற உதடுகளை மெதுவாக அசைக்கிறான். இப்படி ஒரு கூட்டத்தினர் சில சைகைகளாலும், குரல்களாலும், உதட்டசைப்புகளாலும் கருத்துக்களை எடுத்துச் சொல்லிக் கொள்கிறார்கள். இப்படியே இருக்கும் நிலையில் தான் மொழி பிறக்கிறது. இந்தக் கருத்துகளுக்கு எழுத்து என்ற வடிவம் கொடுக்காத வரையில் இந்த மொழி எழுத்து இல்லாத பேசப்படும் மொழியாக மட்டுமே இருந்து வரும்.

முதலில் பேசும் மொழிதான் உண்டாகிறது. ஒருவன் ஒரு பொருளைப் பார்த்து ஏதோ ஒரு பெயரை அதற்கு இடுகிறான். அதை மற்றவர்களும் ஏற்கிறார்கள். அதையே உபயோகப்படுத்தி செயல்களுக்கும் சொற்களை அளித்து தம் எண்ணங்களைத் தம் குரல்கள் கொண்டு பேச்சால் வெளிப்படுத்துகிறார்கள். இது தான் பேசும்மொழி. இந்தப் பேசும் மொழி ஒன்றாக இராது. பல கூட்டங்கள் தம் இயல்பிற்கு ஏற்ப, சூழ்நிலைக்கு ஏற்ப, குரல்களை ஒலித்து சொற்களை உண்டாக்கிக் கொள்கின்றன. ஒரு சொல் ஒரு மொழியில் தரும் பொருளை வேறு மொழியில் காண முடியாது. அப்படி இருந்தாலும் அதன் பொருள் வேறாக இருக்கும்.

இந்த சொற்களுக்கு எழுத்து வடிவம் கொடுத்து எழுதி இலக்கியங்களைப் படைத்திருக்கிறாகள் வாய்ச் சொல்லாகப் பரவிய சில காவியங்களும் கூட உண்டு. எனவே எழுத்து இல்லாத மொழிகள் கூட ஏற்பட்டு வழக்கில் இருந்து வருகின்றன இதை நாம் இன்றும் கண்கூடாகக் காண முடியும் இவ்வாறு மொழிகள் ஏற்படுகின்றன.




சிங்களத் தீவை ஆண்ட ஜீமூத வாகனனின் மகனான கந்தர்ப்பகேது மிகவும் அழகானவன். ஒரு நாள் அவனிடம் ஒரு வியாபாரி தான் ஒவ்வொரு சதுர்த்தசியன்றும் கடலின் நடுவே கற்பகமரத்தையும் அதன் கீழ் அழகிய பெண் ஒருத்தி நகைகள் அணிந்து ஒரு மஞ்சத்தில் உட்கார்ந்திருப்பதைக் கண்டும் வருவதாகக் கூறினான்.

கந்தர்ப்பகேதுவும் அப்படி நடக்கிறதா எனப் பார்க்க ஆவல் கொண்டான். எனவே ஒரு சதுர்த்தசியன்று வியாபாரி கூறிய இடத்திற்கு கடலில் போய்ப் பார்க்கவே கற்பக மரத்தடியே அழகான பெண் ஒருத்தி இருப்பதைக் கண்டான். அவனைக் கண்டதுமே அப் பெண் கடலுக்குள் சென்று மறைந்தாள். கந்தர்ப்பகேதுவும் அவள் மீது ஆசை கொண்டு கடலில் குதித்து அவளைப் பின் தொடர்ந்து சென்றான். அக்கடலின் அடியே தங்க மாளிகை ஒன்றில் வித்தியாதரக் கன்னிகளின் மத்தியில் அந்தப் பெண் அழகிய மஞ்சத்தின் மீது இருப்பதை அவன் கண்டான்.

அவனைக் கண்ட அப் பெண் தன் தோழி ஒருத்தியை அவனிடம் அனுப்பினாள். அத் தோழியும் ''ஐயா! இவள் கந்தர்ப்பகேளி என்ற வித்தியாதர மன்னனின் மகள் ரத்தினமஞ்சரி. யார் தன்னைக் கண்டு ஆசைப்பட்டு கடலில் துணிச்சலோடு குதித்துப்பின் தொடர்ந்து இந்தத் தங்கமாளிகைக்கு வந்து விடுகிறானோ அவனையே இவள் மணப்பதாகச் சபதம் செய்திருக்கிறாள். எனவே உம்மை மணக்க இவள் தயாராக இருக்கிறாள்'' என்றாள்.



கந்தர்ப்ப கேதுவும் மகிழ்ந்து போய் ரத்தின மஞ்சரியை முறைப்படிக் கல்யாணம் செய்து கொண்டான். அவர்கள் இருவரும் கொஞ்ச காலம் அந்த மாளிகையில் சுகமாகக் காலம் கழித்தார்கள்.

அந்த மாளிகையில் ஒரு பெரிய அறையில் ரத்தின மஞ்சரியின் தங்க உருவச்சிலை இருந்தது. அந்தச் சிலையை கந்தர்ப்பகேது தொடக் கூடாது என்றும் அப்படித் தொட்டால் அழிவே ஏற்படும் என்றும் அவள் அவனை எச்சரித்து இருந்தாள்.

ஆயினும் ஒருநாள் அவன் அதைத் தொட்டான். மறு நிமிடம் அந்த சிலை அவனை பலமாக உதைக்கவே அவன் சிங்கள தீவில் வந்து விழுந்து விட்டான். ஆசைப்பட்டால் இப்படித்தான் நாசம் விளையும்.

ஸ்ரீபர்வதமலைமீது மணியாண்டி என்ற ராட்சஸன் இருப்பதாகக் ஒரு வதந்தி நாட்டில் பரவி இருந்தது. அதனால் மக்கள் அந்த மலையிலுள்ள காடுகளில் போக பயப்பட்டார்கள்.

உண்மை என்ன வென்றால் யாரோ ஒரு திருடன் ஒரு மணியைத் திருடிக் கொண்டு அந்த மலையில் காட்டின் வழியே போய்க் கொண்டிருந்தான். அவனை ஒரு சிங்கம் கொன்று அவனது உடலை இழுத்துக்கொண்டு போய் விட்டது. அவன் கையிலிருந்த மணி கீழே விழுந்து விட அதனைச் சில குரங்குகள் கண்டு எடுத்தன். அதனை அவை அவ்வப்போது ஆட்டி கிணி கிணி என்று ஒலிக்கச் செய்துவேடிக்கை பார்த்தன. அந்த ஒலிகேட்டுத் தான் மக்கள் யாரோ ஒருராட்சஸன் மணி அடிக்கிறான் என்ற வதந்தியைக் கிளப்பி விட்டார்கள். ராட்சஸனுக்கும் மணியாண்டி என்ற பெயரையும் வைத்து விட்டார்கள்.

அந்த ராட்சஸன் இறப்பதற்காக ஒரு ஹோமம் செய்தால்

அவருக்குத்தான் ஆயிரம் பவுன் கள் கொடுப்பதாக அந்நாட்டு மன்னன் அறிவித்தான்.

அந்த மணி ஒலிப்பது ஏன் என்பது ஒரு நடன மாது அறிந்து விட்டாள். எனவே அரசனிடம் போய் அவள் தான் ஹோமம் செய்வதாகக் கூறி சில ஏற்பாடு களைச் செய்தாள். பிறகு குரங்கு களுக்குப் பிடித்தமான பழங்களை யும் கடலை வகைகளையும் எடுத்துக் கொண்டு அந்த மலை மீது அவள் போய் குரங்குகள் வசிக்கும் இடத்தில் அவற்றைப் போட்டாள். குரங்குகள் மணியைக் கீழே போட்டு விட்டு பழங்களைச் சாப்பிட ஓடி வந்தன. நடன மாது உடனே அந்த மணியை எடுத்துக் கொண்டு விட்டாள். பின்னர் அவள் ''நான் ஹோமம் செய்து ராட்சஸனை மணியாண்டியைச் இறக்கச் செய்து அவனது மணியை எடுத்துக் கொண்டு வந்து விட்டேன்'' எனக் கூறி மணியை அரசனிடம் கொடுத்தாள். அதற்குப் பின் மலை மீதிருந்து மணி ஓசை கேட்கவில்லை. அரசன் அவளுக்கு ஆயிரம் பவுன்கள் கொடுத்தான்.

ஒரு நாட்டில் உஜ்ஜீவலன் என்பவன் ஒரு ஒட்டகக் குட்டி தனியே இருப்பது கண்டு அதனைப் பிடித்துக் கொண்டு திரும்பி வந்து அதனை வளர்த்து வந்தான். அதுவும் வளர்ந்து பெரிதாகிப் பல ஒட்டகக் குட்டிகளை



ஈன்றது. அவன் அந்தக் குட்டிகளையும் வளர்த்து வாடகைக்கு விட்டு வாழ்க்கை நடத்தலானான்.

அவன் கொஞ்சம் கொஞ்சமாக ஒட்டகங்கள் வாங்கி தன் வியாபாரத்தைப் பெருக்கிக் கொண்டான். அவன் வாங்கிய ஒரு ஒட்டகக் குட்டி மிக அழகாக இருந்தது. எனவே அதன் கழுத்தில் வெள்ளிச் சலங்கைகளைக் கட்டினான். அந்த ஒட்டகம் நடக்கும் போது அவை கலீர் கலீர் என ஒலித்து இனிய நாதத்தை உண்டாக்கின. இதனால் அந்த ஒட்டகம் ஓரேயடியாக கர்வப்பட்டது. மற்ற ஒட்டகங்களோ அதனைக் கண்டு பொறாமைப் பட்டன.

ஒரு நாள் எல்லா ஒட்டகங்களும் காட்டில் மேயப்போயின. அப்போது சலங்கை கட்டிய ஒட்டகம் சற்றுப் பின்னால் மெதுவாகப் போயிற்று. மற்ற ஒட்டகங்கள் இதை கவனிக்காமல் வேகமாகப் போயின. ஒரு கிழ ஒட்டகம் சலங்கை கட்டிய ஒட்டகத்திடம் ''நீ இப்படித் தனியாக மெதுவாக நடந்து செல்கிறாயே. ஏதாவது சிங்கமோ புலியோ நீ தனியாக இருப்பது கண்டு உன்மீதுபாய்ந்து கொன்று விடுமே. உன் சலங்கை ஒலி உன்னைக் காட்டுக் கொடுத்துவிடும்'' என்றது.

ஆனால் கிழ ஒட்டகத்தின் பேச்சை அந்த ஒட்டகம் கேட்காமல் இன்னமும் மெதுவாகவும் ஒட்டகக் கூட்டத்திலிருந்து பிரிந்து தனியாகவும் வேறு வழியிலும் போயிற்று. இருட்டியது. அந்த ஒட்டகம் வழி தவறி அங்கும் இங்கும் அலைந்தது. பயந்து ஓடும் போது சலங்கைகள் ஒலிக்கவே ஒரு சிங்கம் அந்த ஒலி கேட்டு ஒட்டகத்தைக் கண்டது. உடனேயே அந்தச் சிங்கம் அதன் மீது பாய்ந்து அதனைக் கொன்று தின்றது.






# 4

[குந்தளத் தீவிலிருந்து கப்பலில் ஏறி சமரசேனன் பணம் திரட்டி வரக் கிளம்பினான். அப்போது ஒரு வால் நட்சத்திரம் வானில் தென்பட அதையும் பொருட்படுத்தாமல் அவன் பயணம் செய்து ஒரு தீவை அடைந்தான். அங்கு பல பயங்கர மிருகங்களையும் மந்திரவாதிகளையும் கண்டான். அப்போது—]

சமரசேனனும் அவனது ஆட்களும் கொஞ்ச தூரம் ஓடி ஒரு மலைப்பகுதியை அடைந்தார்கள். இப்போது ஒற்றைக் கண்ணனின் குரல் அவர்களுக்குக் கேட்கவில்லை. அவர்களைப் பின்தொடர்ந்து வந்த நாலு கண்ணனின் கரும் ஆந்தையும் மனிதக் குரங்கும் எங்கு போயினவோ தெரியவில்லை. இதனால் அவர்கள் மனம் சற்று நிம்மதி பெற்றது. சமரசேனன் அடர்ந்த காட்டின் மத்தியில் அகப்பட்டு யோசனையில் ஆழ்ந்தான். அப்போது மேகங்கள் சிதறி சூரியன் தென்படவே அவனுக்கு அப்போது தான் தீவின் மேற்குப் பக்கம் இருப்பது தெரிந்தது. அவனது கப்பல் கரை சேர்ந்தது தீவின் கிழக்குப் பக்கத்தில். எனவே கப்பலை அடைய வேண்டுமானால்



அவர்கள் இப்போது உள்ள மேற்குப் பக்கத்திலிருந்து நேர் எதிர்ப் பக்கம் உள்ள கிழக்குப் பக்கமாகப் போயாக வேண்டும்.

சமரசேனன் தன் ஆட்களிடம் அதைக் கூறி ''மேற்கிலிருந்து கிழக்கே போக வேண்டும் என்பதைக் கண்டுபிடித்து விட்டோம். ஆனால் எப்படிப் போவது என்றுதான் தெரியவில்லை. இங்கே எங்கு பார்த்தாலும் மரங்களும் மலைகளுமே இருக்கின்றன. ஒரு பாதைகூட இல்லை. அவற்றோடு பயங்கர மிருகங்கள் வேறு ஆங்காங்கே உள்ளன. அவற்றிடம் அகப்படாமல் தப்பித்துக் கொண்டு நாம் வழி செய்துக் கொண்டுதான் நம் கப்பலை அடைய வேண்டும்'' என்ருன்.

வீரர்களும் ''நாம் இங்கே இருந்தாலும் ஆபத்துதான். போய்க் கொண்டே இருந்தாலும் ஆபத்துக்களை எதிர் நோக்க வேண்டி வரும். இங்கேயே இருந்தால் நம் கப்பலை அடைய முடியாது. எனவே கிழக்கு நோக்கிப் போய்க் கொண்டே இருப்போம். வழியில் ஆபத்து எதுவும் இல்லாதிருந்தால் நம் கப்பலையாவது போய் அடைய முடியும்'' என்ருர்கள்.

சமரசேனனும் ''அப்படியே செய்யலாம். எல்லோரும் வாட்களை உருவிக் கையில் தயாராக வைத்துக்கொள்ளுங்கள். முதலில் நான் செல்கிறேன், மற்றவர்கள் ஒருவர் பின் ஒருவராக வரிசையாக வாருங்கள். ஏனென்ருல் எப்போது எந்த ஆபத்து வரும் என்று நம்மால் சொல்ல முடியாது'' என்ருன்.

வீரர்களும் அவ்வாறே வாட்களை உருவித் தயாராக வைத்துக் கொண்டார்கள். சமரசேனன் முன்னே வழி செய்துகொண்டு செல்ல அவன் பின்ஞல் மற்றவர்கள் நடந்து சென்றனர். இப்படியாகச் சற்று நேரம் கழிந்தது. அவர்களும் கொஞ்ச தூரம் சென்ருர்கள். அப்போது சமரசேனன் சட்டென ''நில்லுங்கள்

அப்படியே. ஒரு அடிகூட எடுத்து வைக்காதீர்கள்'' என்று மெது வாகக் கூறி ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினன். அவர்களும் அங்கு பார்த்துத் திகைத்து நின்றனர்கள்.

அவர்கள் பார்த்த இடத்தில் ஒரு மரத்தின் கீழே இரண்டு புலி கள் நின்று கொண்டிருந்தன. மரக் கிளையில் ஊர்ந்தவாறே ஒரு பெரிய மலைப் பாம்பு அவற்றின் ஒன்றின் மீது விழப் போய்க் கொண்டிருந்தது. இதை அப்புலி கள் கவனிக்காமல் வேறு எங்கோ பார்த்துக்கொண்டு நின்றன.

மலைப் பாம்பு ஒரு புலியின் மீது விழுந்து அதன் தலையைப் பற்றிக் கொண்டு அதன் உடலையும் வேக மாகத் தன் உடலால் சுற்றி வளைக்கலாயிற்று. திடீரென ஏதோ விழுந்ததால் அதிர்ந்து போன மற்ற புலி சட்டென ஓடிச் சற்று தூரத்தில் நின்று திரும்பிப் பார்த்தது.

அது தன் நண்பனுன புலியை மலைப் பாம்பு விழுங்க முயல்வது கண்டு அதன் மீது பாய்ந்தது. சமரசேனன் தன் வீரர்களிடம் ''பார்த்தீர்களா? நாமும் எச்ச ரிக்கையாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்தப் புலி மலைப் பாம்பிடம் அகப்பட்டுக் கொண்டு விழிப்பது போல நாமும் ஏதாவது ஆபத்தில் சிக்கிக்





லானார்கள். சமரசேனன் தன் வீரர்களை உற்சாகப்படுத்தவே சற்று நேரம்வரை குஷியாகவே போய்க் கொண்டிருந்தார்கள். ஆனால் ஓரிடத்தில் அவர்கள் சட்டென நிற்க வேண்டியதாயிற்று. ஏனெனில் ஒரு புதரிலிருந்து ஒரு காண்டா மிருகம் வேகமாக ஓடி வந்தது. சமரசேனனும் ''நாம் ஓடக் கூடாது. அது நம்மைத் தாக்க ஓடி வருகிறது. இப்படியே வரிசையாக வாட்களுடன் நில்லுங்கள். முதலில் அதனை நான் தாக்குகிறேன். மறுவினாடியே நீங்கள் அனைவரும் சேர்ந்து உங்கள் வாட்களால் அதனைக் குத்துங்கள்'' என்றான்.

கொண்டு விழிக்க வேண்டி வரும்'' என்றான்.

அதன் பிறகு சமரசேனன் அங்கிருந்து சற்று தூரம் தள்ளிப் போய் வழி செய்தவாறே நடக்கலானான். வீரர்களும் அவன் பின்னாலேயே சென்றார்கள். அவர்கள் சென்ற வழி சேறும் சகதியுமாக இருந்தது. ஏதோ ஒரு காட்டாறு பெருக்கு எடுத்து ஓடி அப்பகுதியை ஈரமாக்கிச் சேறாக ஆக்கி விட்டது. இன்னும் அந்த ஆற்றில் வெள்ளம் அதிகமாகி ஓடிக் கொண்டிருப்பதைச் சமரசேனனும் அவனது ஆட்களும் பார்த்து ஜாக்கிரதையாகக் கால்களை ஊன்றி வைத்தவாறே மெதுவாகச் செல்ல

சமரசேனன் எதிர்பார்த்தபடியே அந்த காண்டா மிருகம் அவர்களை நோக்கிப் பாய்ந்து வந்தது, சமரசேனனோ சட்டென தன் வாளால் அதன் நெற்றியின் மீது ஓங்கி அடித்தான்' ஆனால் காண்டா மிருகம் அதனை லட்சியம் செய்யாமல் உறுமித் துள்ளலாயிற்று.

மற்ற வீரர்கள் தாமதிக்கவில்லை. சமரசேனன் முன்பு கூறி இருந்தபடி அவர்கள் தம் வாட்களால் அந்த பயங்கர மிருகத்தை ஒரே சமயத்தில் குத்தினார்கள். அது படுகாயப்பட்டு கீழே உருண்டு விழுந்தது. அதன் மரண ஒலி

காட்டையே அதிரவும் செய்தது. சமரசேனனும் தனது வீரர்களைப் பாராட்டியவாறே ''சபாஷ். நாம் இப்போது இந்த மாபெரும் ஆபத்திலிருந்து தப்பி விட்டோம். ஆனல் அது போடும் கூச்சலால் இன்னும் ஏதாவது பயங்கர மிருகம் இங்கே வந்து விடப் போகிறது. அப்படி ஏதாவது வருவதற்கு முன்பே நாம் இந்த இடத்தை விட்டு விரைவில் போய் விட வேண்டும்'' என்ருன். வீரர்களும் ''ஆமாம். ஆமாம். நீங்கள் வழியைக் காட்டுங்கள்.'' எனவே சமரசேனனும் வழி செய்தவாறே அங்கிருந்து வேகமாகக் கிளம்பினன். வீரர்களும் அவனைப் பின் தொடர்ந்து சென்ருர்கள்.

கொஞ்ச தூரம் போனதும் அவர்களுக்கு ஒரு குளம் தென்பட்டது. அப்போது வீரர்கள் ''அந்த காண்டா மிருகத்தைத் தாக்கியதில் களைத்துப் போய் விட்டோம். இப்போது கொஞ்சம் தண்ணீரைக் குடித்து நாம் தாகத்தை போக்கிக் கொள்ளலாம்'' என்றனர். சமரசேனனே ''நமக்கு இந்தக் குளம் பற்றி எதுவும் தெரியாது. நாம் இருப்பது மந்திரத் தீவு. அதனல் இந்த நீர் எப்படிப்பட்டதோ? இதைக் குடித்தால் என்ன நேருமோ யார் கண்டார்கள்?'' என எச்சரித்தான்.

ஆனல் இரு வீரர்கள் ''எங்களுக்குத் தாகம் மிக அதிகமாக இருக்கிறது. நாங்கள் இதில் இறங்



கித் தண்ணீர் குடித்து விட்டு வருகிறோம்'' என்று கூறி அக்குளத்துள் இறங்கினார்கள். அப்போது அக்குளத்திலிருந்து 'சலசல' வென்று ஏதோ சத்தத் கேட்டது. திடீரென நான்கு முதலைகள் நீரின் மேற்பரப்பிற்கு வந்து குளத்தில் இறங்கிய இரு வீரர்களின் கால்களையும் பிடித்துக் கொண்டன.

அதைக் கண்ட சமரசேனனும் மற்ற வீரர்களும் அம்முதலைகளின் மீது அம்பு எய்தார்கள். ஆனால் முதலைகள் அந்த இரு வீரர்களையும் குளத்தினுள் இழுத்துக்கொண்டு வெகு தூரம் போய் விட்டன. இதைக் கண்ட சமரசேனனும் மற்ற நான்கு வீரர்களும் துக்கப்பட்டவர்களாய் எதுவும் செய்ய முடியாத நிலையில் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு அங்கிருந்து சென்றனர். அவர்களது துக்கம் அவர்களை எதுவும் பேசவிடவில்லை.

கொஞ்ச நேரம் நடந்த பின் அவர்கள் ஒரு மிகப் பெரிய ஏரிக் கரையை அடைந்தார்கள். சமரசேனனும் ''இது மிகப் பெரிய ஏரியாக இருந்கிறதே. இதனைக் கடந்து செல்வது எப்படி?'' என்று யோசித்தவாறே நின்றான். அப்போது சற்று தூரத்திலிருந்து ஏரியில் யாரோ குளித்துக் கொண்டு இருப்பது போல சத்தம் வந்தது.

சமரசேனன் சத்தம் வந்த திசையில் பார்த்தான். யாருமே கண்களுக்குப் புலப்படவில்லை. ஆனால்



சத்தம் மட்டும் தொடர்ந்து வந்து கொண்டே இருந்தது. அந்த இடத்திற்கு ஏதிரே இருந்த ஒரு மரக்கிளையில் ஒரு தொப்பி அவன் கண்ணில் பட்டது. அந்தத் தொப்பியில் கண்கள் போன்ற இரு ஓட்டைகள் இருந்தன.

சமரசேனன் ''பார்த்தீர்களா. அதிசயத்தை'' எனக் கூறி மரக் கிளையில் தொங்கும் தொப்பியை அவர்களுக்குக் காட்டினன். அவர் களும் அதைப் பார்த்து ஆச்சரியப் பட்டவாறே நின்றார்கள்.

சமரசேனனும் அவனது வீரர் களும் ஒரு புதரின் பக்கமாகப் போய் ஒதுங்கி நின்று கொண்டு என்ன நடக்கப் போகிறது என்று தொப்பி தொங்கும் மரக்கிளையை யும் அதன் கீழே உள்ள நீர்ப் பரப்பையும் கண்கொட்டாமல் பார்க்கலானார்கள்.

சமரசேனனுக்கு திடீரென அக் குளத்தில் குளிப்பவன் ஒற்றைக் கண் மந்திர்வாதியோ என்ற சந் தேகம் கூட ஏற்பட்டது. ஆனல் சற்று யோசித்துப் பார்த்ததில் அவனுக்கு அங்கே இருப்பவன் ஒற்றைக் கண்ணனக இருக்க முடி யாது என்பது தெரிந்து விட்டது. அப்படியானல் வேறு யாராக இருக்க முடியும்? அந்த விசித்திரத் தொப்பி யாருடையது? இன்னும் யாராவது ஒரு மந்திரவாதியி




னுடையதா? இப்படி சமரசேனன் யோசித்து நின்றபோது குளத்தி னுள் யாரோ ஏதோ பேசும் குரல் கேட்டது. அங்கே குளித்துக் கொண்டிருப்பவன்தான் ஏதோ மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு இருக்கிறன்! அந்தக் குரலில் ஏதோ ஒரு கவர்ச்சியும் கம்பீரமும் இருந்தது. அவன் யாரோ ஒரு அற்புத சக்தி படைத்தவன் என் பது சமரசேனனுக்குத் தெளி வாயிற்று.

இப்படிப்பட்ட நிலையில் இருந்த சமரசேனனும் அவனது வீரர் களும் அப்போது கரை ஓரமாக ஒரு பாம்பு தலையைத் தூக்கிய ப ேறே வருவதைக் கண்டார்கள்.

ஆனுல் அது பாம்பு அல்ல. ஒரு விசித்திரமான பயங்கர மிருகம். அது நான்கு யானைகளின் பருமனைக் கொண்டிருந்தது. ஆனுல் அதன் தலை மட்டும் மிகவும் சிறியதாக நீண்டு இருந்தது.

அது மெதுவாகத் தன் தலையை அக்குளத்துள் விட்டது. அது அந்தக் குளத்தில் கண்ணுக்குப் புலப்படாமல் குளித்துக் கொண்டிருப்பவனைப் பிடிக்க முயன்று கொண்டிருக்கிறது என்று சமரசேனனுக்கு விளங்கி விட்டது.

அந்த விசித்திர மிருகத்தின் வாய் சற்று நேரத்திற்குப் பின் நீர் மட்டத்திற்கு இரண்டடி உயரம் மேலே வந்தது. அப்போது அங்கிருந்து பயங்கரமான அலறல் சமரசேனனின் காதில் விழுந்தது. அப்போது மரக்கிளையிலிருந்த தொப்பி கீழ் நோக்கி வருவதை சமரசேனன் கவனித்தான்.

மறுநிமிடம் குளத்தின் நடுவே அந்தத் தொப்பியை அணிந்து ஒருவன் இருப்பதை சமரசேனனும் அவனது வீரர்களும் கண்டார்கள். அவனைப் பார்த்ததும் அந்த விசித்திர மிருகம் திடீரெனப் பின்வாங்கி கரையிருந்து எங்கோ வேகமாக ஓடிப் போகலாயிற்று.

அப்போது அந்தத் தொப்பிக்காரன் ''ஓ! நீயா! மொடா வயிரனு!! என்னையே விழுங்கப் பார்த்தாயா? இந்த நாலு கண்ணனை உன்னுல் விழுங்க முடியுமா என்ன?'' என்று உரத்த குரலில் கூறினுன்.

அவன்தான் மந்திரவாதி நாலு கண்ணன் என்பது சமரசேனனுக்கும் அவனது வீரர்களுக்கும் அப்போது தெரிந்தது. அவர்களது உடலில் ஒருவித நடுக்கமே ஏற்பட்டது. இந்த மந்திரவாதியின் கண்ணில் படாமல் எப்படித் தப்பிப் போவது என்றே சமரசேனன் அப்போது மிகவும் தீவிரமாக யோசிக்கலானுன்.

(தொடரும்)





# வேண்டாம் புகழ்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினன். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ பேரும் புகழும் பெறவா இப்படிச் சிரமப்படுகிறாய்? சில சமயங்களில் இம்மாதிரி முயற்சி பயனற்றுப் போய் விடும். இதற்கு ஒரு கதை கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

கோவிந்தன் என்பவன் ஒரு கிராமத்து ஏழைக் குடியானவக் குடும்பத்தில் பிறந்தவன் ஆனல் அவனுக்கு அபூர்வ சக்தி இருந்ததால் பல கலைகளைக் கற்ருன். ஆயினும் அவன் விவசாயமே

## வேதாளம் சொல்லும் கதை



செய்து வந்தான். அவனது ஊர் வரலாற்றுப் புகழ் பெற்றது. அங்கு பழங்காலச் சிற்பங்களும் பாழடைந்த அரண்மனை, கோவில், மண்டப மனைகள் என்று இருந்தன. இவற்றைக் காண மிகப் பெரிய பண்டிதர்களும் பேராசியர்களும் ஆராய்ச்சி வல்லுனர்களும் அங்கு வந்து போய்க் கொண்டிருந்தனர். அவர்களோடு பேசிப் பேசிப் பழக்கப்பட்ட கோவிந்தன் ''இவர்களுக்கு என்னை விட அதிகமாக எதுவும் தெரிந்திருக்கவில்லையே. இவர்களுக்கு எப்படி இவ்வளவு பேரும் புகழும் வந்தது?'' என நினைத்து ஆச்சரியப் படலானான்.

அவன் மனதில் தானும் அவர்களைப் போலப் புகழ் பெற்றவனாகத் திகழவேண்டும் என்ற எண்ணம் வலுக்கலாயிற்று. அதை கவனித்த ஒரு கிழவர் ''கோவிந்தா! கிணற்றுத் தவளை போல நீ இந்த ஊரிலேயே இருந்தால் உன் அறிவு வளர்ந்து விடுமா அல்லது நீதான் புகழ் பெற்றுவிட முடியுமா? பட்டணத்திற்குப் போய் முயன்று பார். அப்போது நீ புகழ் பெறுவாய்'' என்றார்.

கோவிந்தன் தன் தந்தையிடம் தன் எண்ணத்தைக் கூறிப் பட்டணம் போவதாகக் கூறினான். அவனது தந்தை ஆட்சேபித்தும் கேளாமல் அவன் தன் ஊரை விட்டுக் கிளம்பி விட்டான்.

அவனது ஊரிலிருந்து பட்டணம் போகும் வழியில் ஒரு அடர்ந்த காடு இருந்தது. அது வழியே தனியாக யாரும் போகமாட்டார்கள் ஏனெனில் திருடர் பயமே அதற்குக் காரணம். கோவிந்தனோ துணிவுடன் அவ்வழியே சென்றான். லானான்.

நடு வழியில் அவனை ஒரு திருடன் மடக்கித் தாக்கினான். ஆனால் கோவிந்தன் அவனை அடித்துக் கீழே வீழ்த்தினான். அப்போது அத்திருடன் ''அடேயப்பா! எட்டு வருடங்களாக இப்படி வழிப்பறி செய்யும் இந்த மாட

சாமியை இதுவரை யாரும் எதிர்த்ததே இல்லை. என் பெயரைக் கேட்டாலே நடுங்குவார்கள். நீயோ துணிச்சலோடு என்னை எதிர்த்துக் குத்திக் கீழே தள்ளிவிட்டாயே'' என்றான்.

கோவிந்தனும் ''நீயா மாடசாமி? நானும் எப்படியாவது புகழ் பெறவேண்டுமெனக் கிளம்பிப் போய்க் கொண்டிருக்கிறேன். உன் துறையில் புகுந்து உன்னைப் போலப் புகழ் பெறலாம் போலிருக்கிறதே. எனக்கு உன் தொழிலில் பயிற்சி அளிக்கிறாயா?'' என்று கேட்டான்.

மாடசாமியும் ''ஓ! உன் போன்றவனுக்குத் தாராளமாகக் கற்றுக் கொடுக்கிறேன். வா இப்போதே. பட்டணத்திற்குப் போகலாம். அங்கு உனக்குத் திருட்டுக் கலையைக் கற்பிக்கிறேன்'' எனக் கூறி கோவிந்தனை அழைத்துக் கொண்டு பட்டணத்திற்குச் சென்றான்.

மாடசாமி ஒரு வீட்டைத் தேர்ந்தெடுத்து அன்று இரவு அவ்வீட்டுக் கொல்லைப்புற மதிலைத் தாண்டிக் குதித்து உள்ளே நுழைந்தான். கோவிந்தனும் அவன் பின்னாலேயே சென்றான். பின்புறக் கதவின் தாழ்ப்பாளை மாடசாமி வெளியிலிருந்தபடியே சுலபமாகத் தள்ளிக் கதவைத் திறந்து உள்ளே



போனான். கோவிந்தன் அவனது ஒவ்வொரு செய்கையையும் கவனமாகப் பார்த்தான்.

மாடசாமி இரும்புப் பெட்டி இருந்த அறையில் போய் பெட்டியையும் சுலபமாகத் திறந்து அதிலிருந்த பணத்தையும் நகைகளையும் மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டான். அப்போது அங்கு சுவரில் மாட்டப்பட்டிருந்த ஒரு பெண்ணின் படத்தைப் பார்த்துத் திகைத்து நின்றான். பின்னர் அடுத்த அறையில் தூங்கும் பெண்ணைப் பார்த்தான். உடனே தான் கட்டிய மூட்டையை அப்படியே விட்டுவிட்டு கோவிந்தனோடு அவ்வீட்டை



விட்டு வெளியே வந்து விட்டான். கோவிந்தன் ''இவ்வளவு கஷ்டப்பட்டுத் திருடியதை அங்கேயே விட்டு விட்டு ஏன் வந்தாய்?'' என்று கேட்க மாடசாமி ''அந்தப் படத்தில் உள்ள பெண் ஒரு முறை காட்டில் படுகாயமுற்றுக் கிடந்த என்னைத் தன் வண்டியில் எடுத்து வந்து சிகிச்சை செய்து காப்பாற்றியவள். அவள் வீட்டில் நான் திருடமாட்டேன்" என்ருன்.

இப்படி உணர்ச்சி வசப்படுபவனோடு இருப்பதில் பயனில்லை என எண்ணி கோவிந்தன் மாடசாமியை விட்டுப் பிரிந்து போய் விட்டான். அடுத்தபடியாக அவன் ஒரு நீதிபதியின் வீட்டை அடைந்தான். அந்த நீதிபதி தினமும் யாராவது ஒருவரைத் தன்னோடு சாப்பிட உட்கார வைத்துக் கொள்வது வழக்கம் அன்று கோவிந்தன் அவர் கண்ணில் படவே அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போனுர். அவன் சாப்பிட்ட பின் அவனைப் பற்றி விசாரித்து அவன் அந்த வீட்டிலே எவ்வளவு நாட்கள் வேண்டுமானுலும் தங்கி இருக்கலாம் என்று அவர் கூறினுர்.

அந்த ஊரில் மலையப்பன் என்ற மாபெரும் வீரன் இருந்தான். அவனை எதிர்த்துத் தோற்கடித்தால் தனக்குப் பேரும் புகழும் வரும் என கோவிந்தன் எண்ணி மலையப்பன் என்னென்ன செய்கிருன் என கவனித்தான்.

தினமும் மலையப்பன் தன் வீட்டு பூங்காவில் மாலைவேளையில் தனியாக இருப்பதைக் கண்டான். ஒரு நாள் மாலையில் கோவிந்தன் அந்தப் பூங்காவில் நுழைந்து கத்தி கொண்டு மலையப்பனை திடீரென்று தாக்கினுன். அவனும் திகைத்துப் போய் ''யாரப்பா நீ?'' என்று கேட்டான்.

கோவிந்தனும் ''நான் உன்னை எதிர்த்து மாவீரன் எனப் பெயர் பெற விரும்புகிறேன்'' எனவே மலையப்பனும் "அதற்கு இப்படியா மறைந்திருந்து தாக்குவது? பத்து

பேர் முன் சண்டைபோட்டு என்னைத் தோற்கடிக்கவல்லவா வேண்டும்?'' என்ருன்.

கோவிந்தனும் ''அப்படிச் செய்து பலர் முன் நான் தோற்க விரும்பவில்லை. அதற்கே இப்போது உன்னோடு தனியாகச் சண்டை போட வந்தேன்'' என்ருன். உடனே மலையப்பனும் கோவிந்தனுடன் சண்டையிட்டான். ஆனால் கோவிந்தன் மலையப்பனை மிக எளிதில் தோற்கடித்து விட்டான்.

அது கண்டு மலையப்பன் ''நீ முறைப்படி சண்டை போட என்னிடம் கற்றுக்கொள். நான் பயிற்சி அளிக்கிறேன்'' என்ருன்.

கோவிந்தனே ''அதனால் எனக்கு என்ன லாபம்?'' எனவே மலையப்பனும் சிரித்தவாறே ''நான் உனக்கு மாதா மாதம் ஆயிரம் பவுன்கள் கொடுக்கிறேன்'' என்ருன். கோவிந்தனும் அதற்கு இணங்கினன். மூன்று மாதங்களாயின. கோவிந்தன் குத்துச் சண்டையில் குருவையே மிஞ்சி விட்டான். மலையப்பனும் ''இவ்வளவு போதும்.'' எனக் கூறி கோவிந்தனுக்கு மூவாயிரம் பவுன்கள் கொடுத்து அனுப்பிவிட்டான்.

அந்தப் பணத்தோடு கோவிந்தன் அண்ணுமலை என்ற பெரிய வியாபாரியின் நண்பனுகி அவனது யோசனையைக் கேட்டு வியாபாரம்



செய்து லட்சாதிபதியாகி விட்டான். அப்போது அண்ணுமலை ''உனக்கு வந்த லாபத்தில் ஆறில் ஒரு பங்கை தான தர்மத்திற்குச் செலவு செய்'' என்ருன். ஆனால் லட்சாதிபதியாகியும் தனக்குப் பேரும் புகழும் வரவில்லையே என்று கோவிந்தன் கண்டு வியாபாரத்தை விட்டு விட்டு ஓவியக் கலை, இசை முதலிய துறைகளில் புகுந்தான். அப்போதும் அவனுக்கு பேரும் புகழும் கிட்ட வில்லை.

அப்போது ஒருநாள் தான் இருந்த பட்டணத்திற்குத் தன் தந்தை வந்ததை கோவிந்தன் கண்டு அவர் வந்த காரணத்தைக் கேட்டான். அவரும் ''நான் என்

வயலில் எல்லோரையும் விட அதிகமாக விளைச்சலை காண்பித்தேன். அதனால் அரசாங்கம் என்னை கௌரவித்து இன்று எனக்குப் பரிசும் பட்டமும் அளிக்கப் போகிறது'' என்றான். அன்று நடந்த விழாவிற்கு அவர் தன் மகனையும் அழைத்துச் சென்றார்.

கோவிந்தன் அங்கு தன் தந்தை பாராட்டப்பட்ட விதத்தையும் அவர் அடைந்த புகழையும் நேரில் கண்டான். அப்போதே அவன் தன் தந்தையோடு ஊர் திரும்பி மறுபடியும் விவசாயத்தில் ஈடுபட்டான். தான் புகழ்பெறவேண்டும் என்ற ஆசையை அவன் விட்டு விட்டான்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''கோவிந்தன் தன் புகழ்பெற வேண்டும் என்று ஆசையை ஏன் விட்டு விட்டான்? அவன் புகுந்த துறைகளில் எல்லாம் வெற்றி பெற்றானே, எதிலாவது ஒன்றில் அவன் புகழ் பெற்றிருக்கலாமே. ஏன் அப்படிச் செய்யாமல் ஊர் திரும்பினான்? இக் கேள்விகளுக்கு சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''கோவிந்தனுக்கு ஒருதுறையில் நிலைத்து இருந்து முயற்சி செய்தால் புகழ் கிட்டும் என்ற உண்மை தன் தந்தை அயராது விவசாயத் தொழிலில் ஈடுபட்டதிலிருந்து தெரிந்தது. தன்னைப் போல ஊரை விட்டு வராமல் ஒரே துறையில் அவர் தம் திறமையைக் காட்டி புகழ் பெற்றார் எனக் கண்டு அவன் இனியும் தான் முயற்சிப்பது பயனளிக்காது என எண்ணியே ஊர் திரும்பினான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தின் மீது ஏறிக் கொண்டு விட்டது.







# அட திருடா!

கட்டைய்யனின் முன்னோர்கள் திருட்டுத் தொழிலையே செய்து பிழைத்தவர்கள். எனவே கட்டைய்யனும் அதே தொழிலைச் செய்தான். கட்டைய்யனுக்கு கந்தன் என்ற மகன் இருந்தான். கந்தனுக்குத் தன் தொழிலைக் கட்டைய்யன் கற்பித்தான். ஆனால் கந்தன் திருட்டுத் தொழிலைச் செய்ய விரும்பவில்லை. எனவே அவன் அலைந்து திரிந்து முடிவில் நகைக் கடை நாராயணனிடம் வீட்டுக் காவல்க்காரனாக வேலையில் அமர்ந்தான்.

நாராயணனிடம் இரண்டு விலையுயர்ந்த வைரக்கற்கள் இருந்தன. அது போன்ற நான்கு வைரக்கற்கள் கோபாலசாமி என்ற வியாபாரியிடம் இருந்தது. அக்கற்களுக்கு அயல் நாடுகளில் நல்ல கிராக்கி இருந்ததால் நாராயணன் அந்த நான்கு வைரங்களையும் கோபாலசாமியிடமிருந்து விலைக்கு வாங்க முயன்றான். கோபாலசாமி அவற்றை விற்கவிரும்பவில்லை. அதனால் அவற்றை எப்படியாவது திருடி விட நாராயணன் தீர்மானித்தான்.

அவன் கந்தனிடம் ரகசியமாக ''நீ கோபாலசாமியிடமிருந்து அந்த நான்கு வைரக்கற்களையும் திருடிக் கொண்டு வந்து விட்டால் நிறைய பணம் கொடுக்கிறேன்'' என்று கூறினான். அதைக் கேட்ட கந்தன் ''ஐயா! எங்கள் வம்சம் திருட்டுத் தொழிலையே செய்து வந்தது. அப்படிச் செய்யக் கூடாது என்று தானே நான் உங்களிடம் வேலைக்கு அமர்ந்திருக்கிறேன். இப்போது என்னைத் திருடச் சொல்கிறீர்களே. இதைச் செய்ய முடியாது'' என்றான்.

பாபநாசம் சர்மா

அதைக் கேட்ட நாராயணன் ''நீ திருட்டுக் கட்டையனின் மகனு? இதை முதலிலேயே சொல்லி இருந்தால் உன்னை நான் வேலைக்கே வைத்துக் கொண்டிருக்க மாட்டேனே!'' எனக் கூறி உடனேயே வேலையிலிருந்து நீக்கி விட்டான். கந்தனும் பேசாமல் போய் விட்டான்.

மறு நாள் கோபாலசாமி நாராயணனிடம் வந்து ''நாராயணு! நான் ஒரு மாதகாலத்திற்கு ஊரில் இருக்க மாட்டேன். ஊரில் திருட்டு பயம் இருப்பதால் என் விலையுயர்ந்த நான்கு வைரக் கற்களையும் உன்னிடம் கொடுக்கிறேன். நீ பத்திரமாக வைத்திருந்து எனக்குத் திருப்பிக் கொடு'' எனக் கூறி நான்கு வைரங்களையும் அவனிடம் கொடுத்து விட்டுப் போனுன்.

மூன்று வாரங்களுக்குப் பின் கோபாலசாமி நாராயணனிடம் வந்து ''நான் கொடுத்த வைரங்களைத் திருப்பிக் கொடுக்கிருயா?'' என்று கேட்டான். நாராயணனே ''வைரக்கற்களா? என்னிடமா கொடுத்தாய்? அதற்கு அத்தாட்சி என்ன?'' என்று கேட்டான்.

கோபாலசாமியும் சிரித்துக் கொண்டே ''நீ இப்படிப்பட்டவனு? அந்தக் கந்தன் சொன்ன போது நான் முதலில் நம்பவில்லை. உண்மையை அறியவே அந்த வைரங்களை உன்னிடம் கொடுத்தேன். இப்போது அவை உன்னிடம் இல்லை. இதோ பார். என்னிடமே வந்து விட்டது. அதே கந்தன் உன் வீட்டிலிருந்து திருடி வந்து ஒரு வாரத்திற்கு முன்பே கொடுத்து விட்டான். அவன் நேர்மையானவன். நீதான் திருடன். உன்னைப் பற்றி ஊர் முழுவதும் பறைசாற்றுகிறேன்'' எனக் கூறி விட்டுப் போனுன்.

கோபாலசாமி வீட்டுக் காவல்காரனுகக் கந்தன் தான் வேலை செய்தான்



# கிடைப்பதுதான் கிடைக்கும்!

வெள்ளையம்மாளும் பச்சையம்மாளும் அடுத்தடுத்த வீட்டுக்காரிகள். இருவருக்கும் ஒருவரைக் கண்டால் மற்றவருக்குப் பிடிக்காது. ஒருநாள் வெள்ளையம்மாள் பசுமாடு வாங்க ஐநூறு ரூபாய் எடுத்துக் கொண்டு கிளம்பிய போது பச்சையம்மாள் ''போய் மாடு வாங்காமல் கைப் பணத்தையும் கோட்டை விட்டுவிட்டு வெறுங்கையுடன் வராதே. அவரவர்களுக்குக் கிடைப்பதுதான் கிடைக்கும்'' என்று சொல்லி அனுப்பினுள்.

வெள்ளையம்மாள் பச்சையம்மாள் கூறியதை லட்சியம் செய்யாமல் சந்தைக்குப் போனுள். மாலையில் அவள் மாடு இல்லாமல் திரும்பி வந்தது கண்டு பச்சையம்மாள் ''பணத்தை தொலைத்து விட்டாயா? எல்லாம் அவரவர்களுக்குக் கிடைப்பதுதான் கிடைக்கும்'' என்ருள்.

வெள்ளையம்மாளும் ''ஆமாம். சந்தையில் ஐநூறு ரூபாய்க்கு ஒரு பசு மாடு வாங்கினேன். வழியில் அதைப் பார்த்த ஒருவர் ஆயிரம் ரூபாய் கொடுத்து என்னிடமிருந்து வாங்கிப் போய் விட்டார். எனக்கு ஐநூறு ரூபாய் லாபம். நீ சொன்னது போல அவரவர்களுக்கு கிடைப்பதுதான் கிடைக்கும்'' என்ருள். பச்சையம்மாள் வாயடைத்துப் போனுள்.





# மாப்பிள்ளை விஜயம்

பசுபதியின் முன்னோர் பணக்காரர்களாக இருந்தார்கள். அந்தப் பெயரில் அவன் காலம் ஓடிக்கொண்டிருந்தது. வழக்கு வியாஜ்யம் என்று தன் நிலங்களை எல்லாம் இழந்து விட்ட அவன் இரு புதல்விகளுக்கும் எப்படியோ ஒரே முகூர்த்தத்தில் கல்யாணத்தை செய்து விட்டான்.

கல்யாணத்தின் போது அவன் தன் மாப்பிள்ளைகளுக்கு அவர்கள் கேட்டதெல்லாம் கொடுப்பதாக வாக்களித்திருந்தான். ஆனால் எதுவும் கொடுக்கவில்லை. அந்த மாப்பிள்ளைகளுக்கும் பசுபதி ஊரெல்லாம் கடன் வாங்கி கல்யாணம் செய்திருக்கிறான் என்றும் அவனிடம் வாய்ச்சொல்லைத் தவிர வேறு எதுவும் இல்லை என்றும் தெரிந்தது. கல்யாணமான வருடம் தலை தீபாவளிக்கு மாப்பிள்ளைகளை அழைக்குமாறு பசுபதியின் மனைவி பார்வதி தன் கணவனிடம் முன் கூட்டியே கூறினாள். பசுபதியும் தான் அவர்களுக்குக் கடிதம் எழுதிப் போட்டாகி விட்டது என அவளிடம் கூறினான். ஆனால் உண்மையில் அவன் அவர்களுக்குக் கடிதமே எழுதவில்லை. காரணம் தீபாவளிச் செலவிற்குப் பணம் இல்லாததுதான்.

தீபாவளிக்கு அழைப்பு வரும் என எதிர்பார்த்து புக்ககத்தில் இருந்த பசுபதியின் இரு புதல்விகளும் அழைப்பு வராமல் போகவே தம் கணவன்மார்களிடம் ''அழைப்பு இல்லாவிட்டால் என்ன! என் தந்தை எல்லா சீர் வரிசைகளையும் குறை இல்லாமல் செய்வார். நீங்கள் கிளம்புங்கள்'' எனக் கூறி அவர்களை

கரூர் கண்ணப்பன்

அழைத்துக் கொண்டு தீபாவளிக்கு முதல் நாள் தம் ஊருக்கு வந்து சேர்ந்தார்கள்.

தான் அழைப்பு அனுப்பாத போதிலும் தம் புதல்விகள் தம் கணவன்மார்களுடன் வந்து விட்டது கண்டு பசுபதி திகைத்துப் போனுன். இந்த மாதிரி சமயங்களில் தன் மனைவி நிலைமையை சமாளித்து விடுவாள் என்பது அவனுக்குத் தெரியும். எனவே அவன் யார் கண்ணிலும் படாமல் எங்கோ போய் விட்டான்.

பார்வதி அக்கம் பக்கத்து வீடுகளுக்கு ஓடி கடனை வாங்கி பட்சணங்களை செய்து எப்படியோ தீபாவளிப் பண்டிகையை நடத்தினுள். பசுபதியும் தீபாவளியன்று நள்ளிரவில் வீட்டுக்கு வந்தான். தான் ஏதோ அவசர வேலையாகப் போனதாகக் கூறி தன்மனைவி செய்த பட்சணங்களைச் சாப்பிட்டு விட்டு காலையானதும் எங்கோ போய் விட்டான்.

அப்போது மூத்த மகள் தன் தாயாரிடம் ''என்னம்மா! அப்பா கல்யாணத்தின் போதே மாப்பிள்ளைக்கு மோதிரம் போடவில்லை. இப்போதாவது போட வேண்டாமா?'' என்ருள். தாயாரும் ''இதோ பார். இந்த நெல் மூட்டைகள் இருக்கின்றன. இவற்றை விற்றுவது நான், போட்டு அனுப்புகிறேன்'' என்ருள். மூத்த மகள் தன் கணவனிடம் போய் ''என் அம்மா



இந்த நெல் மூட்டைகளை விற்று உங்களுக்கு மோதிரம் போடு கிருளாம் '' என்ருள்.

அது போலவே இளைய மக ளும் தன் தாயாரிடம் மாப் பிள்ளைக்கு மோதிரம் போடுவது பற்றி ஞாபகப் படுத்தவே அவ ளும் ''கவலைப்படாதே, நம் வீட்டு வண்டி மாடுகளை விற்று வது, நான் மோதிரம் போடு கிறேன்'' என்ருள் அவளும் தன் கணவனிடம் தன் தாயார் கூறியதைச் சொன்னுள்.

மூத்தமகள் தன் கணவனிடம் ''அம்மாவிற்கு நெல்லை விற்கும் சிரமம் கொடுப்பானேன்? நீங் களே மூட்டைகளை வண்டியில் போட்டு அடுத்த ஊர் மண்டி யில் விற்றுப் பணம் வாங்கி வாருங்கள்'' என்ருள். அந்த மாப் பிள்ளையும் வீட்டு வண்டியைக் கட்டி அதில் மூட்டைகளை ஏற்றி ஞன். அப்போது இரண்டாவது மாப்பிள்ளை ஓடி வந்து வண்டியில் ஏறிக் கொண்டான். அடுத்த ஊரில் முதல் மாப்பிள்ளை நெல்லை விற்க முயன்று வியாபாரிகள் கேட்ட கேள்விகளுக்கு அனுபவ மில்லாத அவன் ஏதோ உளறி ஞன். அவர்கள் அது திருட்டு நெல் என சந்தேகித்து அவனைக் காவலதிகாரியிடம் பிடித்துக் கொடுத்து விட்டார்கள். இது போலவே இரண்டாவது மாப் பிள்ளை எருதுகளை விற்கப் போய் சரியான பதில் கூற முடியாமல் விழித்தான். அவனையும் எருது வாங்க வந்தவர்கள் சந்தேகத்தின் பேரில் காவலதிகாரியிடம் பிடித் துக் கொடுத்தார்கள்.

பசுபதி தன் மாப்பிள்ளை களுக்கு மோதிரங்கள் வாங்க யாரிடமோ கடன் வாங்கி வந் திருந்தான். அந்தப் பணம் மாப் பிள்ளைகளை விடுவித்து வர காவ லதிகாரிக்கு உடனடியாக லஞ்ச மாகக் கொடுக்கத் தான் உப யோகப்பட்டது.






# தங்கக் கிண்ணம்

வெகு காலத்திற்கு முன் போதிசத்வர் ஒரு நாட்டில் பழைய பாத்திர வியாபாரம் செய்து வந்தார். பழைய பாத்திரங்களை நியாயமான விலைக்கு வாங்கிக் கொண்டு அதற்கான விலையையோ அல்லது வேறு புதுப் பாத்திரங்களையோ அவர் கொடுப்பார். அவரைப் போலவே அவ்வூரில் பேராசை பிடித்த மற்றொரு பழைய பாத்திர வியாபாரியும் இருந்தான். அவன் மோசடி வியாபாரம் செய்து வந்தான்.

ஒரு முறை தலைநகரிலிருந்து வேறொரு நகருக்கு அவர்கள் இருவரும் போனார்கள். அந்நகருக்கு முன் உள்ள ஆற்றைப் படகில் ஏறிக் கடந்து சென்று நகரை அடைந்தார்கள். இருவரும் தம் வியாபாரத்தை அந்த ஊரில் தொடங்கினார்கள்.

அந்த ஊரில் ஒரு பணக்காரக் குடும்பம் மிகவும் நொடித்துப் போய் ஏழையாகி கஷ்டப்பட்டுச் கொண்டிருந்தது. அக் குடும்பத் தலைவி வீட்டிலுள்ள பாத்திரங்களை அவ்வப்போது விற்று குடும்பத்தைக் காப்பாற்றி வந்தாள். அந்த வீட்டிலிருந்த எல்லாப் பாத்திரங்களும் இவ்வாறு போய் விட்டன. ஒரே ஒரு பாத்திரம்தான் மிஞ்சி இருந்தது. அது பாசி பிடித்துக் கருப்பாகி இருந்தது. அதை யாருமே வாங்கிக் கொள்ள மாட்டார்கள் என்று வீட்டுத் தலைவி எண்ணித் தனியாக வைத்திருந்தாள். உண்மையில் அது தங்கக் கிண்ணம். வெகு நாட்களாக உபயோகப்படுத்தாதலால் அழுக்கேறி நிறம்மாறி இருந்தது.

தெருவில் 'பழைய பாத்திரம் வாங்குகிறேன்' என்ற குரல்

கேட்டு அந்த வீட்டுத் தலைவி பாத்திரக்காரனை அழைத்தாள். அப்படி வந்தவன் பேராசை பிடித்த பாத்திரக்காரன். அவனிடம் அக்குடும்பத் தலைவி அந்தப் பழைய பாத்திரத்தைக் காட்டவே அவன் அதை வாங்கிப் பார்த்தான். அது தங்கத்தால் ஆனது என்று அவனுக்குத் தெரிந்து விட்டது. ஆனால் வீட்டுத் தலைவிக்கு அது தெரியவில்லை எனக் கண்டு அவன் அவளை ஏமாற்றி ஏதோ கொஞ்சம் சில்லரை கொடுத்து அதனைத் தட்டிக் கொண்டு போகத் திட்டம் போட்டான்.

எனவே அவன் அப் பாத்திரத்தை தூர விட்டெறிந்து ''இதை யார் வாங்குவார்கள்? இதற்கு பத்துக் காசுதான் தருவேன்'' என்று ஒரேயடியாக அடாவடி செய்தான். வீட்டுத் தலைவியோ ''என்னப்பா ஒரு வெள்ளிக் காசாவது கொடு'' என்று கெஞ்சினாள். அவனோ பிகு செய்து கொண்டு 'முடியாது' எனக் கூறி விட்டு எழுந்து போய் விட்டான். அப்போது விட்டு விட்டு இன்னும் ஒரு நான்கு மணி நேரம் கழித்து வந்தால் அந்த வீட்டுத் தலைவி தான் கேட்ட விலைக்கே அந்தத் தங்கக் கிண்ணத்தைக் கொடுத்து விடுவாள் என்பது அவன் எண்ணம்.

அந்தப் பேராசைக்காரன் அவ் வீதியில் தன் வியாபாரத்தை முடித்துக் கொண்டு போன பின்



போதிசத்வர் குரல் கொடுத்த வாறே வந்தார். அப்போது அந்த இல்லத் தலைவி ''சரி இவனிடமா வது இந்தப் பாத்திரத்தைக் கொடுத்து ஒரு வெள்ளிக் காசு வாங்கி இன்றையப் பொழுதை ஓட்டலாம்'' என எண்ணி அவனை வீட்டினுள் கூப்பிட்டு அந்தக் கிண் ணத்தைக் காட்டினாள்.

போதிசத்வர் அதைப் பார்த்து விட்டு அது தங்கக் கிண்ணம் எனக் கண்டு ''அம்மா, இது விலை உயர்ந்த தங்கக்கிண்ணம். இதனை நான் எடுத்துக் கொண்டு விலை கொடுக்கிறேன். இது ஆயிரம் வெள்ளிக் காசுகள் பெறும். என் னிடம் ஐநூறு வெள்ளிக்காசுகளும் சில வெள்ளிப் பாத்திரங்களும் உள்ளன. அவற்றைக் கொடுக்கி றேன். எனக்கு ஊர் திரும்ப ஐந்து வெள்ளிக் காசுகளை வைத் துக் கொண்டு மீதம் கொடுக்கி றேன்'' என்றார்.

வீட்டுத் தலைவியும் ''அப் படியா! இது இவ்வளவு விலை பெறுமா? சற்று முன் வந்த ஒரு வன் இது ஐந்து காசு கூடப் பெறாது எனத் தூக்கி எறிந்தானே. அவன் என்னை ஏமாற்றப் பார்த் தான் போலிருக்கிறது'' எனக் கூறினாள். போதிசத்வரும் பணத் தையும் வெள்ளிப் பாத்திரங்களை யும் கொடுத்து விட்டு அந்தத் தங்கக் கிண்ணத்தை வாங்கிச் கொண்டு ஆற்றின் கரைக்குப் போய் படகில் ஏறினார். படகும்



அங்கிருந்து செல்லலாயிற்று. போதிசத்வர் போன சற்று நேரத்திற்கெல்லாம் அந்தப் பேராசை பிடித்த வியாபாரி அந்த வீட்டிற்கு வந்து ''கொடு அம்மா அந்தப் பாத்திரத்தை. போனால் போகிறது என்று நீ கேட்டபடியே ஒரு வெள்ளிக் காசைக் கொடுக்கிறேன்'' என்றான்.

வீட்டுத் தலைவியோ ''ஏய் மோசக்காரா! என்னை ஏமாற்றி ஆயிரம் வெள்ளிக் காசுகள் விலை பெறும் தங்கக் கிண்ணியை ஒரு வெள்ளிக் காசுக்கா வாங்கிக் கொண்டு போகப் பார்க்கிறாய்: போபோ. வேறொரு வியாபாரி எனக்கு அதற்கு உரிய நியாயமான விலையைக் கொடுத்து விட்டு பாத்திரத்தை வாங்கிக் கொண்டு போய் விட்டார்'' எனக் கூறி படாரென்று கதவைச் சாத்திக் கொண்டு போய் விட்டாள்.

அடடா! ஒரு வெள்ளிக் காசு கொடுத்து ஆயிரம் வெள்ளிக்காசுகள் பெறுமான பாத்திரத்தைத் தட்டிக் கொண்டு போக நினைத்ததை இந்த போதிசத்வர் வந்து கெடுத்து விட்டரே என்று அந்தப் பேராசைக்கார வியாபாரி ஆத்திரம் கொண்டான். அவன் வேக வேகமாக ஆற்றின் படகுத் துறைக்கு ஓடினான்.

ஆனால் அப்போது போதிசத்வர் ஏறிச் சென்ற படகு ஆற்றில் பாதி தூரத்திற்கு மேல் சென்று விட்டது.

அதைக் கண்ட பேராசைக்காரனின் ரத்தம் கொதித்தது. கொழுத்த லாபம் வர இருந்தது போதிசத்வரால் கையைவிட்டுப் போய் விட்டதே. என எண்ண எண்ண அவன் நெஞ்சம் விம்மியது. ரத்த ஓட்டம் அதிகரிக்க அவன் இதயம் வெடித்துக் கீழே விழுந்து இறந்தான்.

போதிசத்வரின் நேர்மையால் ஏமாற இருந்த ஒரு குடும்பம் நிறையப் பணம் பெற்று நன்கு வாழ வழி ஏற்பட்டது.





## சமயப் பிரசாரம்

பூரணஞானம் பெற்ற சித்தாத்தர் பிறப்பு இறப்பு ஆகியவற்றிலிருந்து விடுபட்டு நிர்வாணம் அடையும் நிலையை எய்து விட்டார். ஆனால் மனித இனம் அறியாமையிலும் துயரத்திலும் உழல்வது கண்டு அவற்றைப் போக்க மக்களுக்கு அறிவுரைகள் கூறத் தீர்மானித்தார்.

முதலில் அவர் தன்னை விட்டுச் சென்ற தன் ஐந்து சீடர்களைத் தேடி அவர்களை வாரணாசிக்கு அருகே ஒரு வனத்தில் கண்டார். அவர்கள் முதலில் புத்தரை லட்சியம் செய்யவில்லை. ஆனால் புத்தர் அவர்களருகே சென்ற போது அவர்கள் தம்மை அறியாமலேயே அவரது கால்களில் விழுந்து வணங்கினார்கள்.





இதன் பின் புத்தரின் சீடனானவன் ஒரு பணக்காரனின் மகனான யசன் என்பவன். யசனின் தந்தை தன் மகனை புத்தரிடமிருந்து பிரித்துத் தன் வீட்டிற்கு அழைத்துப் போக வந்தான். ஆனால் புத்தரோடு பேசிய அவன் மறு நிமிடமே அவரது சீடனாகி விட்டான்.



ஒரு குளக்கரையில் சில பணக்கார இளைஞர்கள் தம் மனைவிகளுடன் உல்லாசமாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒரு பிரம்மச்சாரி ஒரு நடன மாதை அழைத்து வந்திருந்தான். எல்லோரும் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த போது அவள் எல்லோருடைய நகைகளையும் சுருட்டிக் கொண்டு ஓடி விட்டாள்.

இளைஞர்கள் அவளைத் தேடிப் பிடிக்கக் கிளம்பினார்கள் வழியில் அவர்கள் புத்தரைச் சந்தித்தார்கள். அவரும் "நடனமாதைத் தேடுவதை விட உங்கள் மனதைத் தேடி ஆத்மசிந்தனை செய்யுங்கள்" என்றார். அவர்கள் அறிவு தெளிந்து புத்தரது சீடர்களாக ஆனார்கள்.





ஒரு நகருக்கு வெளியே கசியபர் என்ற பெயர் பெற்ற தபஸ்வி தம் ஐநூறு சீடர்களுடன். தங்கி இருந்தார். அவர் தாமே பெரிய அறிவாளி என எண்ணிக் கர்வப் பட்டுக் கொண்டிருந்தார். புத்தர் அவரிடம் பேசித் தம் கொள்கைகளைக் கூற அவரும் அவரது சீடர்களும் அதனை ஏற்று புத்தரது சீடர்களாகி விட்டார்கள்.

கசியபரும் அவரது சீடர்களும் தம் தலைச் சடைகளைக் கத்தரித்து ஆற்றில் எறிந்தனர். அவை மிதந்து வெகு தூரம் போய் வேறு இரு தபஸ்விக்களிடம் சிக்க அவர்கள் அது பற்றி விசாரித்து புத்தர் இருக்கும் இடத்திற்கு வந்து அவரது சீடர்கள் ஆனார்கள்.





புத்தரது புகழ் எங்கும் பரவியது. ஆயிரக்கணக்கான சீடர்களோடு அவர் ராஜக்கிரகத்திற்கு வந்தார். மன்னர் பிம்பிசாரர் அவரை சகல மரியாதைகளுடன் வரவேற்று இருக்கச் செய்தார்.

புத்தரைக் கபில வஸ்துவிற்கு அழைத்து வருமாறு அவரது தந்தை சுத்தோதனன் தூதர்களை அனுப்பினான். ஆனால் அவர்கள் திரும்பி வராமல் புத்தரது சீடர்களாகி அவருடன் இருந்து விட்டார்கள். ஆயினும் புத்தர் கபிலவஸ்துவிற்குச் சென்றார். அவரை அவரது தந்தையும் சிற்றன்னையும் மற்றப் பிரமுகர்களும் வரவேற்றார்கள்.





அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் புத்தரைக் காணவந்தார்கள். ஆனால் அவரது மனைவி யசோதரை மட்டும் வரவில்லை. "என் மீது கருணை இருந்தால் அவரே என்னைப் பார்க்க வரட்டும்" என்று அவள் கூறினாள். அவளும் சன்னியாச வாழ்க்கை தானே நடத்திவந்தாள்! புத்தரும் அவளைக் காண வரவே வந்தார்.

புத்தர் சன்னியாசி ஆகிவிட்டதால் அவருக்குபதிலாக அவரது பங்காளியான ஆனந்தனை அரசனாக்க முயற்சிகள் நடக்கலாயின. பட்டாபிஷேக நாளன்றே அவனுக்குத் திருமணமும் செய்வதாக ஏற்பாடாகி இருந்தது. கபிலவஸ்து விழாக்கோலம் பூண்டிருந்தது. மாப்பிள்ளை புத்தாடைகளை உடுத்து தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டான்.





ஆனந்தன் புத்தரது ஆசிகளைப் பெற வந்தான். புத்தர் பிச்சை எடுக்கும் தன் பாத்திரத்தை அவன் கையில் கொடுத்துவிட்டுக் கிளம்பினார். ஆனந்தனும் அப்பாத்திரத்தோடு அவர் பின்னால் செல்லலானான். ஆனந்தனை மணக்கவிருந்த பெண் இதனைக் கண்டு கண்ணீர் வடித்தாள். ஆனால் புத்தர் தன் பாத்திரத்தை ஆனந்தனிடமிருந்து வாங்கிக் கொள்ளவில்லை. ஆனந்தனும் அவரிடம் அதைக் கொடுக்காமல் அவர் பின் நடந்து சென்றான்.

# இதுவே போதும்!

ரங்கன் ஒரு திருவிழாவைக் காணத் தலைநகருக்குச் சென்றான். அங்கு அரசன் தன் தர்பாரில் முதல் நாள் நல்ல இசைக் கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்திருந்தான். ரங்கன் மற்றவர்களோடு அதை ரசித்துக் கேட்டான். அப்போது அவன் ''அடடா, நானும் சங்கீதம் கற்றிருந்தால் இம்மாதிரி பாடுவேனே'' என நினைத்துக் கொண்டான்.

இதே போல இரண்டாவது நாள் கவியரங்கம் நடந்தபோதும் ரங்கன் தான் கவியாகவில்லையே என எண்ணினான். மூன்றாவது நாள் ஓவியக் கண்காட்சி நடந்தது. அப்போதும் ரங்கன் தானும் ஒரு ஓவியன் ஆகவில்லையே என மனம் புழுங்கினான்.

ரங்கன் தலைநகரிலிருந்து ஊர் திரும்பும்போது வழியில் ஒரு நொண்டியையும் செவிடனையும் ஒரு குருடனையும் பார்த்தான். அவர்களைக் கண்டு அவன் மனம் இரங்கி ''நல்லவேளை. நான் இவர்களைப்போல இல்லை. நானே நடந்து போய் தலை நகரில் இசையை அனுபவித்தேன். ஓவியத்தையும் கவியரங்கத்தும் ரசித்தேன். ஆனால் என்னைப்போல நடக்கவோ, கவிதைகளைக் கேட்கவோ ஓவியங்களைப் பார்க்கவோ இவர்களால் முடியாதே'' என எண்ணித் தன் மனதைத் தேற்றிக்கொண்டு சென்றான்.





# பிரியமாட்டேன் இனி

ஒரு வியாபாரி தன் இரு புதல்வர்களுக்குக் கல்யாணம் செய்து வைத்து அவர்கள் ஒன்றாக வாழ்வது கண்டு திருப்தி அடைந்து கண்ணை மூடினான். இறக்குமுன் தன் மூத்த மகனைத் தனியாக அழைத்து ''நீ உன் தம்பியோடு சண்டை போடாமல் அனுசரித்துக் கொண்டு போ. அவன் சுபாவம் துடுக்கானது. எனவே அவன் என்ன சொன்னாலும் செய்தாலும் பொறுத்துக் கொண்டு அவனை அணைத்துக் கொண்டுபோ'' என அவன் கூறினான்.

தன் கணவனின் அண்ணனிடம் மாமனார் ஏதோ கூறுவதைப் பார்த்த இளையவனின் மனைவி தன் மாமனார் பணத்தை எங்கோ ரகசியமாக வைத்திருப்பதைக் கூறுகிறார் என எண்ணினாள். அவளுக்கு வெகு நாளாகவே தனிக் குடித்தனம் நடத்த வேண்டும் என்ற ஆசை. தன் கணவனிடம் அவள் பல முறை கூறியும் அவன் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

இப்போது அவள் தன் கணவனிடம் ''பார்த்தீர்களா! பணம் வைத்த ரகசியத்தை உங்கள் தந்தை உங்கள் அண்ணனிடம் தான் சொன்னார். உங்களிடம் சொல்லவில்லை. நீங்கள் அந்தப் பணத்தில் பங்கு கேட்டு வாங்குங்கள். நாம் தனியாகப் போய் சுகமாக இருக்கலாம். இவர்களோடு சேர்ந்து கஷ்டப்படுவானேன்'' என்று தினமும் கூறி வரலானாள். இது அவன் மனதிலும் கொஞ்சம் கொஞ்சமாகப் பதியலாயிற்று.

ஒரு நாள் தம்பி அண்ணனிடம் ''அப்பா இறக்குமுன் உன்னிடம்

இராஜ மணியன்

ஏதோ ரகசியமாகச் சொன்ஞராமே. அது என்ன?'' என்று கேட்டான். அண்ணனும் ''நானும் நீயும் என்றும் ஒற்றுமையாக ஒன்ருகப் பிரியாமல் இருக்க வேண்டும் என்று சொன்ஞர்'' என்ருன்.

தம்பியோ ''இதை நான் நம்ப மாட்டேன். சரி சரி. நான் தனியாகப் போகிறேன். என் பங்கிற்குப் பணம் கொடு'' என்ருன். அண்ணனும் ''பணம் ஏது? அப்பா எதுவும் வைத்து விட்டுப் போகவில்லையே'' என்ருன் ஆஞல் தம்பியோ ''எல்லாம் எனக்குத் தெரியும், அவர் புதைத்து வைத்த பணத்தில் பாதியைக் கொடு'' என்ருன்.

அது கேட்டு அண்ணன் திகைத்துப் போனுன். பதில் பேசாமல் உள்ளே போய் தன் மனைவியிடம் ''உன் நகைகளை எல்லாம் கொடு'' என்று அவன் கேட்டான். அவளும் எல்லாவற்றையும் கொடுக்கவே அவற்றை அவன் எடுத்துப் போய் தன்குடும்ப நண்பரும் வட்டிக் கடைக்காரருமான விசுவநாதனிடம் ''ஐயா, இந்த நகைகளை வைத்துக் கொண்டு எவ்வளவு பணம் கொடுக்க முடியுமோ அவ்வளவு கொடுங்கள்'' எனக் கேட்டான்.

அவரும் ''பணத்திற்கு அப்படி என்ன அவசரச் செலவு?'' என்று



கேட்க அண்ணனும் ''இது குடும்ப ரகசியம். எப்படிச் சொல்வது?'' என்ருன். விசுவநாதனும் ''இதோ பார், நானும் உன் தந்தையும் நகமும் சதையும் போல இருந்தவர்கள். நீ உன் குடும்ப ரகசியத்தை என்னிடம் சொல்லாவிட்டால் வேறு யாரிடம் சொல்லப் போகிருய்? தயங்காதே. தாராளமாக என்னிடம் சொல்'' என்று கேட்டார்.

அப்போது அண்ணன் கண்ணீர் மல்க ''என் தம்பி என்னை சந்தேகிக்கிருன். என் தந்தை இறக்கு முன் ஏதோ புதைத்து வைத்த பணம் பற்றி ரகசியமாக என்னிடம் கூறியதாக நினைக்கிருன்.

எனவே இந்தப் பணத்தை எடுத்துப் போய் என் வீட்டுப் பின்புறத்தில் புதைத்து விட்டு அவனிடம் சொல்லி அவனுக்கே இதைக் கொடுத்து விடப் போகிறேன். அப்போதாவது குடும்பத்திலிருந்து பிரிந்து போகாமல் இருப்பானு என்று பார்க்கிறேன்'' என்ருன்.

விசுவநாதனும் பணம் கொடுக்கவே அண்ணன் அதனை வாங்கிக் கொண்டு வீட்டிற்கு வந்தான். அன்றிரவே யாருக்கும் தெரியாமல் அந்தப் பணத்தை வீட்டின் பின்புறத்தில் ஓரிடத்தில்புதைத்து வைத்தான்.

மறுநாள் காலை அண்ணன் தம்பியை அழைத்து 'தம்பீ! என்னை மன்னித்து விடு. நம் தந்தை கூறிய ரகசியத்தை உன்னிடம் சொல்லவில்லை எல்லாம் பணத்தாசை தான். காரணம் அவ்வளவையும் நானே வைத்துக்கொள்ள ஆசைப்பட்டேன். சரிவா. பணம் புதைத்து வைக்கப்பட்ட இடத்திற்குப் போகலாம். நீயே எல்லாப் பணத்தையும் எடுத்துக் கொள்'' என்ருன்.

தம்பியும் ''அண்ணு! எல்லாம் எனக்குத் தெரியும். அண்ணியின் நகைகளைக் கொண்டு போய்க் கொடுத்து பணத்தை வாங்கிப் புதைத்து விட்டு நம் தந்தை கூறிய ரகசியம் என்று என்னிடம் சொல்கிறீர்களே. நேற்று விசுவநாதன் என்னை அழைத்து புத்திமதிகள் கூறி உங்களது உயரிய எண்ணத்தையும் செய்கையையும் கூறினுர். எனக்கு புத்தி வந்தது. இனி ஒரு நாளும் தனியாகப் போக வேண்டும் என்று என் மனைவியின் பேச்சைக் கேட்டுக் கூற மாட்டேன். நம் தந்தையின் கடைசி விருப்பப்படி நாம் என்றும் ஒன்ருகவே இருப்போம்" என்ருன்.

அண்ணன் ஆனந்தத்தால் தம்பியை அப்படியே கட்டித் தழுவிக் கொண்டான்.



# காதில் ஏன் விழவில்லை?

ஜமீன்தாரர் ஜகபதியை யாராவது புகழ்ந்து விட்டால் போதும் அவரது உச்சி குளிர்ந்து விடும். ஒரு நாள் அவர் தம் பல்லக்கில் ஏறித் தன் நண்பர்களோடு உல்லாசப்பயணம் சென்றார். எல்லோருக்கும் சாப்பிட உணவும் கூடவே எடுத்துச் செல்லப்பட்டது.

உச்சி வேளை ஆனதும் எல்லோரும் சாப்பிட உட்கார்ந்தனர். அப்போது ஜமீன்தாரர் ''இந்த ஆற்றின் நீரோட்டத்தில் புன்னகையையும் இந்த மரங்களின் அசைவில் இசையையும் நாம் பார்த்தும் கேட்டும் ரசிக்கிறோம் அல்லவா?'' என்றார். சுற்றிலும் சாப்பிட உட்கார்ந்தவர்கள் ''ஆமாம் ஆமாம்'' என்று தலை ஆட்டினார்கள். சிலர் ஜமீன்தாரரின் ரசனையைப் பாராட்டினார்கள்.

ஆனால் பல்லக்கைச் சுமந்து வந்தவர்கள் மட்டும் எதுவும் சொல்லாது நிற்பது கண்டு ஜமீன்தாரர் ''நான் சொன்னது உங்கள் காதில் விழவில்லையா?'' என்று கேட்டார். அவர்களும் ''எப்படி விழும்! எங்களுக்குப் பசி காதடைத்துப் போகும்படி இருக்கிறதே இந்த நிலையில் சாப்பாட்டைத் தவிற வேறு எதை ரசிக்க முடியும்?'' என்றார்கள்.

அப்போது தான் ஜமீன்தாரருக்கு அவர்களுக்கும் உணவு கொடுக்க வேண்டும் என்ற நினைவு வந்தது. உடனே அவர்களுக்கும் உணவு கொடுக்கும்படித் தன் ஆட்களிடம் கூறினார்.





# ஆகா! மாப்பிள்ளையே!!

வள்ளிக்கு அழகண்ணன் என்ற மகன் இருந்தான். அவனுக்கு புத்தி கொஞ்சம் மந்தம். அவனது தந்தை அவனுக்கு நிறையப் பணம் வைத்து விட்டு இறந்து போனார். அதனால் அழகண்ணனின் உறவினர்கள் தம் பெண்களை அவனுக்குக் கொடுத்து அப் பணத்தை அடைய முயன்றார்கள். அவர்களது நோக்கத்தைப் புரிந்து கொண்ட வள்ளி அவர்களது பெண்களை எல்லாம் வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளினாள் அதனால் ஆத்திரப் பட்ட உறவினர்கள் அழகண்ணன் அரைப் பைத்தியம் என்று பிரசாரம் செய்ய ஆரம்பித்தார்கள். இதனால் வெளியூரிலிருந்து அழகண்ணனுக்குப் பெண் கொடுக்க வருவோர் யாருமே இல்லை.

அவள் சற்று தூரத்திலுள்ள சகடையூர் சாமியப்பன் என்பவனின் மகளைத் தன் மகனுக்கு விவாகம் செய்து வைக்க எண்ணி பெண் பார்க்க ஒரு நாளையும் குறிப்பிட்டு அழகண்ணனையும் தன்னோடு அழைத்துச் சென்றாள்.

சகடையூரின் ஆரம்பத்தில் ஒரு வீட்டின் முன் வள்ளி வண்டியை நிறுத்தி அங்கு சாமியப்பனின் வீடு எங்கே உள்ளது என விசாரிக்கலானாள். அப்போது அந்த வீட்டு வாசலில் நின்ற பதினாறு வயதுப் பெண் ஒருத்தியைக் கண்ட அழகண்ணன் அவளிடம் போய் ''நீ தான் சாமியப்பனின் மகள் சண்பகமா?'' என்று கேட்டான். அவள் பதில் எதுவும் சொல்லாமல் வீட்டிற்குள் போய் விட்டாள்.

இதற்குள் சாமியப்பனே அவர்களைத் தேடிக் கொண்டு வந்து விட்டான். அவர்களைத் தன் வீட்டிற்கு அவன் அழைத்துப்

சுதா சுவாமிநாதன்

போனான். அவர்களைக் கை கால் அலம்பிக் கொண்டு வரத் தன் வீட்டின் பின் கட்டிற்கு அழைத்துச் சென்றான். அங்கே நின்ற ஒரு பெண்ணைப் பார்த்த அழகண்ணன் சாமியப்பனின் மகன் சோலையப்பனிடம் "இவள் தான் சண்பகமா?" என்று கேட்டான்.

சோலையப்பனும் சிரித்து விட்டுப் பேசாமல் இருந்தான். சற்று நேரத்தில் பெண் பார்க்கும் படலம் ஆரம்பமாகியது. வள்ளி, அழகண்ணன் சாமியப்பன், சோலையப்பன் ஆகியோர் ஒரு பக்கமாக உட்கார்ந்தனர். அப்போது அங்கு பெண் ஒருத்தி வந்து நின்றாள்.

அப்போது அழகண்ணன் சாமியப்பனிடம் "இவள் தான் சண்பகமா?" என்று கேட்டான். சாமியப்பன் பதில் சொல்லாமல் இலேசாக ஒரு புன்னகை புரிந்தான். மறு நிமிடம் தலை நிறையப் பூவை வைத்துக் கொண்டி புதுப் புடவை கட்டிக் கொண்டு உரல் போலப் பருமனான பெண் ஒருத்தியை அழைத்து வந்து உட்கார வைத்தார்கள். அவள் பக்கமாக அவளது தோழி போல இன்னொரு பெண் உட்கார்ந்திருந்தாள்.

அப்போது அழகண்ணன் "இதென்ன! கல்யாணப் பெண்ணிற்கு அலங்காரமே செய்யாமல் அவளது தாயாருக்கு அலங்காரம்



செய்திருக்கிறீர்கள்?" என்று சாமியப்பனிடம் கேட்டான்.

சாமியப்பனும் "இவள் தான் கல்யாணப் பெண். அவள் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவள் தான் இப்பெண்ணின் தாய்" என்றான்.

அது கேட்டு அழகண்ணன் தன் தாயாரிடம் "அம்மா, இந்தத் தடிப் பெண்ணையா நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்? முடியாது. எனக்கு இஷ்டம் இல்லை" எனக் கூறி எழுந்தான். அப்போது சாமியப்பன் "அழகண்ணா! நீ தான் என் மாப்பிள்ளை" என்றான் சிரித்துக் கொண்டே.

அழகண்ணனோ "மாப்பிள்ளையாவது தோப்பிள்ளையாவது!

ஐயோ! இந்த ஊரலே நான் கல்யாணம் செய்துக் கொள்ள மாட்டேன்'' என்ருன் வெறுப்போடு.

அப்போது சாமியய்பன் ''பயப்படாதே மாப்பிள்ளே! இவள் கல்யாணப் பெண் இல்லே. கொஞ்சம் விவரமாகச் சொல்கிறேன். நீங்கள் இங்கே வருவதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன் ஒரு சிலர் உங்கள் ஊரிலிருந்து வந்தார்கள். அவர்கள் உன்னே அரைப் பைத்தியம் என்று கூறி என்னிடம் பெண் கொடுக்க வேண்டாம் என்று சொல்லி விட்டுப் போனுர்கள். அது எவ்வளவு தூரம் உண்மை எனக் காணவே இப்படி எல்லாம் செய்தேன். முதன் முதலில் நீ இந்த ஊர் ஆரம்பத்தில் ஒரு வீட்டு வாசலில் ஒரு பெண்ணேப் பார்த்துப் பேசினுயே அவளே என் மகள் சண்பகம். நீ எப்படிப் பேசுகிருய், எப்படி நடந்து கொள்கிருய். என்று காணவே இப்படி செய்தேன்'' என்ருன். அப்போது அழகண்ணன் ''இதுவும் ஒரு விளேயாட்டா?'' என்ருன். அப்போது வள்ளி ''அழகண்ணு! பேசாமல் இரு. இப்போதாவது என் மகன் எல்லோரையும் போலத்தான் என்பது தெரிந்ததா?'' என்று சாமியப்பனிடம் கேட்டாள்.

சாமியப்பனும் ''அவனுக்கு என்ன குறை? அதற்காகத்தான் யாராவது எதையாவது சொன்ஞல் நம்பக் கூடாது என்றே நானே பரீட்சித்துப் பார்த்து திருப்தி அடைந்தேன்'' என்ருன்.

இதற்குள் சண்பகத்தை அலங்கரித்து அங்கே அழைத்து வந்தார்கள். வள்ளியும் அழகண்ணனும் அவளேக் கண்டு தம் திருப்தியைத் தெரிவித்தார்கள். அழகண்ணனுக்கும் சண்பகத்திற்கும் விவாகம் நடக்க, சாமியப்பனும் தன் மாப்பிள்ளே எதிலும் குறைந்து போய் விடவில்லே என்று மிக மிகத் திருப்தி அடைந்தான்.







# பாட்டால் அவஸ்தை

மணிக்கு உற்றார் உறவினர் என்று யாரும் இல்லை. அவன் பண்ணையார் பரமசிவம் வீட்டில் வேலை செய்து வந்தான். அவன் எல்லா வேலைகளையும் சரியாகவே செய்தாலும் வேலை செய்யும் போது ஏதாவது பாட்டைப் பாடிக் கொண்டே இருப்பான். அவனது குரலோ கேட்க சகிக்காது.

பண்ணையாருக்கும் அவர் மனைவிக்கும் அவன் பாடினால் பிடிக்காவிட்டாலும் வஞ்சகமில்லாமல் உழைக்கிறானே என்று கொஞ்ச நாட்கள் பேசாமல் இருந்தார்கள்.

பண்ணையாரின் கடைக்குட்டி காமேஷ். அவன் மணியின் பாட்டைக் கேட்டாலே ஐயோ அப்பா என்று அலறலானான். இதைக் கண்ட பண்ணையார் ''ஏய் மணி! நீ இனிமேல் பாடக் கூடாது. அப்படிப் பாடினால் உனக்கு இங்கே வேலை இல்லை'' என்றார். அவரது மனைவியோ ''இந்த வீண் தொல்லை எதற்கு? பேசாமல் கணக்கைத் தீர்த்து அனுப்பி விடுங்கள்'' என்றாள். பண்ணையாரும் தன் மனைவி கூறியது போலவே செய்து மணியை வேலையிலிருந்து நீக்கி விட்டார்.

பண்ணையாரின் வீட்டை விட்டுக் கிளம்பிய மணி காட்டின் பக்கம் போனான். அங்கு போய் தான் பாடினால் அங்குள்ள மிருகங்கள் பட்சிகள் எல்லாம் அந்த இசையை ரசித்துக் கேட்கும் என அவன் எண்ணி உரத்த குரலில் பாடலானான். இப்படியே இருட்டும் வரை பாடினான். இருட்டிய பின்னும் உற்சாகத்தோடு மேலும் உரத்த குரலில் அவன் பாடத் தொடங்கி விட்டான். நள்ளிரவாயிற்று. அவன் பாட்டை சற்று

ராஜலட்சுமி ராமமூர்த்தி



தூரத்தில் இருந்த ஒரு ராட்சஸி கேட்டுக் கொண்டு இருந்தாள். அவளுக்கு ஒரு மகள் இருந்தாள். அவளுக்குக் கல்யாணமாக வேண்டி இருந்தது. அவள் மிகவும் விகாரமாக இருந்ததால் அவளை யாருமே கல்யாணம் செய்து கொள்ளத் தயாராக இல்லை.

மணியின் பாட்டைக் கேட்டதும் அந்த ராட்சஸிக்கு ஒரு அருமையான யோசனை தோன்றியது. தன் மகளுக்கு சங்கீதம் சொல்லிக் கொடுத்தால் அந்த இசையில் மயங்கி யாராவது அவளைக் கல்யாணம் செய்து கொண்டு விடுவான் என எண்ணினாள். மணியின் குரல் அந்த ராட்சஸிக்கு மிகவும் இனிமையாகப் பட்டது. எனவே மணியைத் தன் மகளுக்குப் பாட்டு வாத்தியராக அமர்த்தி விடுவது எனத் தீர்மானித்துக் கொண்டாள்.

மணி பாடி விட்டு முடிவில் படுத்துத் தூங்கி விட்டான். அப்போது ராட்சஸி அவனை அலாக்காகத் தன் குகைக்குள் கொண்டு போய் தன் மகள் முன் போட்டாள். மகளோ ''அம்மா. நான் தான் மனிதமாமிசம் சாப்பிடுவதில்லையே'' என்றாள்.

ராட்சஸியோ ''இவனை நீ தின்பதற்காகக் கொண்டு வரவில்லை. இவன் பெரிய சங்கீத வித்வான். இவனிடம் நீ பாட்டைக் கற்றுக் கொள். உன் பாட்டைக் கேட்டு மயங்கி உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள பலபேர் வருவார்கள்'' என்றாள்.

மகளும் ''ஓகோ! அப்படியா விஷயம். சரிசரி'' என்றாள். இதற்குள் மணி கண்விழித்துப் பார்த்தான். தன் எதிரே இரண்டு ராட்சஸிகள் இருப்பது கண்டு ஓவென அலறினான்.

அப்போது தாய் ராட்சஸி ''பயப்படாதே. காட்டில் நீ மிக நன்றாகப் பாடிக் கொண்டிருந்ததை நான் கேட்டேன். உன் மாதிரி வேறு யாராலும் பாடமுடியாது. என் பெண்ணிற்கு பாட்டு

சொல்லித் தா. பை நிறையப் பவுன்களாகக் கொடுக்கிறேன்'' என்ருள்.

தன் இசைக்கு இவ்வளவு மதிப்பு இருப்பது கண்டு மணி அந்த ராட்சஸியின் மகளுக்கு சங்கீதம் கற்றுக் கொடுக்கும் ஆசிரியஞக இருக்கச் சம்மதித்தான். பகலெல்லாம் ராட்சஸிகள் தூங்கியதால் அவன் காட்டில் போய்த் தனக்கு வேண்டிய கிழங்கு, பழங்களை எடுத்து வந்தான்.

இரவானதும் தாயும் மகளும் எழுந்தனர். மகளைப் பாட்டு கற்றுக் கொள்ளும்படிச் சொல்லி விட்டு தாய் ராட்சஸி கர்ட்டிற் குள் போய் விட்டாள். குட்டி ராட்சஸி குருவான மணியின் கால்களில் விழுந்து வணங்கி விட்டு தோலே எடுத்து விரித்து உட்கார்ந்து கொண்டாள். மணி ஒரு பாட்டின் பல்லவியைப் பாடிக் காட்டிஞன். அவள் அதைத் திரும்பப் பாடிஞள். ஆ! என்ன கர்ண கடூரமான குரல்! மணியால் அதைக் கேட்டுச் சகிக்க முடியவில்லே. ஏதோ பாறைகள் விழுந்து 'கட' 'முட'வென உருள்வது போன்ற சத்தம் அவளது குரலில் தொனித்தது.

உடனே மணி ''நிறுத்து. இன்னும் கொஞ்சம் தாழ்ந்த சுருதியில் பாடு'' என்ருன். அவள் தன்



குரலே எவ்வளவு தாழ்த்தியபோதிலும் இடிஇடிப்பது போலத்தான் குரல் இருந்தது. எப்படியோ ஒரு விதமாகப் பல்லவியை அவன் கற்றுக் கொடுத்து விட்டு அவளேப் பாடிப்பழகச் சொல்லி விட்டு படுத்துக் கண்ணே மூடிஞன்.

அவ்வளவுதான். குட்டி ராட்சஸியின் சாதகம் ஆரம்பமாகி விட்டது. அதைக் கேட்டுக் கொண்டு மணியால் தூங்க முடியவில்லே. இதே சமயம் தாய் ராட்சஸி வந்து ''ஆகா! என் மகளா இவ்வளவு இனிமையாகப் பாடுகிருள். பேஷ்பேஷ்'' என்று கூறி மிகவும் மெச்சிக் கொண்டாள். மணியால் அந்த குகையில்

இருக்க முடியவில்லை. குட்டி ராட்சஸியின் பாட்டுத்தான் அப்படி அவனை வாட்டி எடுத்தது. இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் மணி தாய் ராட்சஸியிடம் ''உன் பெண்ணின் குரல் சங்கீதத்திற்கு ஏற்றதல்ல. அவளுக்கு பாட்டு வேண்டாம்'' என்று சொல்லிப் பார்த்தான்.

தாய் ராட்சஸியோ ''வாத்தியாரே! பார்த்து பேசும். அவள் குரல் எவ்வளவு நன்ருக இருக்கிறது! உங்களை விட நன்ருகப் பாடுகிருளே! ஒரு வேளை பொருமைப்பட்டு இப்படிச் சொல்கிறீரா?'' என்று ஒரு அதட்டல் போட்டாள்.

அப்போது தான் மணிக்கு பாட்டு என்பது தான் மட்டும் பாடி அனுபவிப்பது அல்ல, பிறரும் அதனைக் கேட்டு ரசித்துப் பாராட்ட வேண்டும் என்பது விளங்கியது. மற்ற கலைகளைப் பயில்வது போல இசைக்கலையை பயில்வது முடியாது. அதைப் பிறர் கேட்கத்தான் கேட்பார்கள். குரல் கேட்க சகிக்க முடியாது போனல் வெறுக்கத்தான் செய்வார்கள். அவனுக்கே அப்படிப்பட்ட அனுபவம் கிடைத்து விட்டதே.

அவன் ஐந்தாவது நாள் காலையில் எழுந்ததும் காட்டை விட்டே ஓடி பண்ணையாரின் ஊருக்கு வந்து விட்டான். ராட்சஸியின் பணத்தைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. அவன் பண்ணையாரிடம் ''நான் உங்களிடம் மறுபடியும் வேலைக்கு அமர்கிறேன். இனிமேல் பாடவே மாட்டேன். என் பாட்டு எப்படிப்பட்டது என்று எனக்கு இப்போது புரிந்து விட்டது'' என்ருன்.

பண்ணையாரும் அவனது அனுபவத்தைக் கேட்டு விட்டு ''சரி வேலையைச் செய். இனி மேல் பாடவே பாடாதே'' என்ருர். அவனும் பாடுவதையே அறவே விட்டு ஒழித்தான்.





# தேவி பாகவதம்

சர்யாதி என்ற மன்னனின் மகள் சுகன்யை. ஒரே மகளான அவளை மிகவும் அருமை பெருமையாக அவனும் அவனது மனைவியும் வளர்த்து வரலானார்கள். தலை நகருக்குச் சற்று தூரத்திலுள்ள அழகான குளத்தின் பக்கம் சியவனர் என்ற முனிவர் தவம் செய்து கொண்டிருந்தார். அவர் நெடுங்காலமாகத் தவம் செய்ததால் அவரைச் சுற்றிலும் மண் புற்றுகள் ஏற்பட்டன.

ஒரு நாள் சர்யாதி தன் மகளுடனும் மற்ற நண்பர்களுடனும் வேடிக்கையாகப் பொழுதைக் கழிக்க அந்தக் குளக்கரைக்கு வந்தான். அப்போது சுகன்யை தன் தோழிகள் சிலருடன் அங்கும் இங்கும் சுற்றிப் பார்க்கக் கிளம்பினாள். அவள் ஒரு மண் புற்றின் இரு துவாரங்களிலிருந்து 'பளிச்' 'பளிச்' சென ஒளிவருவதைக் கண்டாள். புற்றில் பாம்பு இருக்கும் என எண்ணி அவள் ஒரு முள்ளை எடுத்து அந்த ஒளி வந்த இரு துவாரங்களிலும் பலமாக குத்தினாள்.

அப்போது 'ஆ' வென மெல்லிய குரலில் யாரோ கத்துவதும் தன்னை அப்படிக் குத்தியவர்கள் உடல் நலம் இல்லாது துடிதுடிக்குமாறும் யாரோ சாபம் இடுவதும் அவள் காதில் விழுந்தது. அது கேட்டு அவள் பயந்து தன் தோழிகளுடன் உடனேயே அந்த இடத்தை விட்டு ஓடிவிட்டாள். அவள் அப்படிக் குத்தியது தவம் செய்து கொண்டி

சியவனர்



இங்கே ஒரு புற்றில் ஏதோ ஒரு பாம்பின் கண்கள் போல் தெரியவே அவற்றை நான் முள்ளால் குத்தினேன். அப்போது எங்கிருந்தோ 'ஆ' வென்ற அலறலும் யாரோ பேசுவது போன்ற குரலும் கேட்க பயந்து ஓடிவந்து விட்டேன்'' என்ருள்.

அது கேட்டு சர்யாதி சுகன்யையை அழைத்துக் கொண்டு அவள் காட்டிய புற்றை அடைந்தான். அதைப் பிளந்து பார்த்த போது ஒரு முனிவர் இருப்பது கண்டு ''ஆ! இவர் சியவனர் ஆயிற்றே. இவரது தவத்தைக் கலைத்து விட்டாயே. அதன் பலன்தான் நாம் எல்லோரும் அவஸ்தைப் படுகிருேம்'' என்ருன்.

சியவனரும் ''என் கண்களைக் குத்தி குருடாக்கி என் தவத்தைக் கலைத்தவர் பலரோடு வந்திருந்ததால் இப் பகுதியில் உள்ளவர்களெல்லாம் அவஸ்தை படும்படி சபித்தேன். இனி குருடனை நான் நித்திய கர்மானுஷ்டானங்களை எப்படிச் செய்வேன்? யாராவது என்னுடன் இருந்தே ஆகவேண்டும். எனவே இப்படிச் செய்த உன் மகளை எனக்கு மணமுடித்துக் கொடு. அவள் என் மனைவியாக இருந்து எனக்கு பணிவிடை புரியட்டும்'' என்ருர்

ருந்த சியவனரின் கண்களைத்தான். அதனுல் சியவனர் குருடராகி விட்டார். அவர் அதனுல் தான் மனம் வெதும்பிச் சபித்தார். அந்த சாபம் பலித்து விட்டது. சர்யாதியும் அவனேடு வந்தவர்களும் வயிற்று உபாதையால் அவஸ்தைப் பட்டார்கள். தினப்படி கழிக்கும் நித்திய கடன்களைச் செய்ய முடியாமல் உடலில் அவை அடைபட்டு வெளியேற முடியாது திணறலானுர்கள்.

இதற்குக் காரணம் என்ன என்று சர்யாதி திகைத்து நிற்கையில் சுகன்யை அவனிடம் போய் ''ஒரு வேளை நான் செய்த தவருல் இப்படி வந்ததோ என்னமோ!

சர்யாதி தன் மகளின் தலை விதி இப்படியா எனத் திகைக்கையில் சுகன்யையோ ''அப்பா! நான் இவரைச் சந்தோஷத்தோடு மணந்து இவருக்குப் பணிவிடைகள் புரிகிறேன். நான் செய்த குற்றத்திற்கு இதுதான் சரியான தண்டனையும் ஆகும்'' என்றாள்.

சர்யாதியும் தன் மகளை சியவனருக்கு மணம் செய்து கொடுப்பதாகக் கூற அவரும் எல்லோருடைய உபாதைகளும் நீங்க மறு சாபம் கொடுத்துச் சரி செய்தார். சுகன்யைக்கும் சியவனருக்கும் திருமணம் நடந்தது. தன் மகளை சியவனரோடு அவரது ஆசிரமத்தில் வாழ விட்டுஅவன் தன் அரண்மனைக்குத் திரும்பி வந்தான்.

சுகன்யையும் சற்றும் மனம் கோணுமல் சியவனருக்கு எல்லா வேலைகளையும் செய்து வரலானுள். அவருக்குக் காய்கனி கிழங்குகளைக் கொடுத்து புசிக்கச் செய்வாள். அத்தோடு அவரை அல்லும் பகலும் அக்கறையுடன் அவள் கவனித்துக் கொண்டு அவர் மனம் கோணுமல் குறிப்பறிந்து பணி விடைகளைச் செய்து வரலானுள்.

சர்யாதியும் மற்றவர்களும் சுகன்யை இப்படித் தன் கணவனுக்குப் பணிவிடைகள் புரிவது கண்டு புகழ்ந்தார்கள்.



சுகன்யை ஒரு நாள் குளத்தில் குளித்து விட்டுத் தன் ஆசிரமத்திற்குத் திரும்பிச் சென்று கொண்டிருந்தாள். அப்போது தேவ வைத்தியர்களான அசுவினி குமாரர்கள் அவளைப் பார்த்து ''ஆகா எவ்வளவு அழகாக இருக்கிருள் இவள்!'' என எண்ணினுர்கள்.

அவர்கள், இருவரும் அவளை அணுகி ''பெண்ணே! நீ யார் என்று தெரியவில்லையே. நாங்கள் சூரியனின் புதல்வர்கள். தேவ வைத்தியர்களான அசுவினி குமாரர்கள். நீ தேவலோகத்தைச்



மான ஒரு முனிவருக்குக் கல்யாணம் செய்து வைத்தார்?'' என்று கேட்டார்கள்.

சுகன்யையும் ''ஆமாம். நானே இவரை மணந்து கொள்வதாகக் கூறியதன் பேரில் தான் அவர் என்னை இந்த முனிவருக்கு மணம் செய்து வைத்தார். நான் சுகமாகவே வாழ்கிறேன்'' என்றாள்.

அசுவினி தேவர்களும்'' என்னம்மா இது! நல்ல அழகான வாலிபனைத் தேர்ந்து எடுத்துக் கல்யாணம் செய்து கொள்ளாமல் போயும் போயும் கிழவனுன இந்தக் குருடனையா நீ. கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்? உன் இளமை எல்லாம் பாழாகிறதே'' என்றார்கள்.

அது கேட்டு சுகன்யை கடுகடுப்பாக ''நீங்கள் சூரிய தேவனின் புதல்வர்கள். தேவ வைத்தியர்களான அசுவினி குமாரர்கள் என்ற காரணத்தாலேயே அன்னிய புருஷர்களாகிய உங்களுடன் பேசினேன். நீங்கள் என் கணவனை இப்படித் தாழ்வாகப் பேசினல் உங்களைச் சபிக்க வேண்டி வரும்'' என்று எச்சரித்தாள்.

அதைக் கேட்ட அசுவினி குமாரர்கள் பயந்துதான் போனர்கள். அவர்களும் ''அம்மணி. நீ மிகவும் நல்லவள். கற்புக்கரசி எனவே ஏதாவது வரம் கேள்.

சேர்ந்தவளா ? கந்தர்வ பெண்ணு? அரசகுமாரியா? உன் தந்தை யார் ? உன் கணவன் யார்? ''என்றெல்லாம் கேள்விகளாகக் கேட்டார்கள்'

அதைக் கேட்ட சுகன்யை வெட்கப் பட்டவாறே ''நான் தேவலோக கன்னிகையும் அல்ல. கந்தர்வ கன்னிகையும் அல்ல. மானிடப் பெண்தான் என் கணவர் சியவன முனிவர். என் தந்தை சர்யாதி என்ற அரசர்'' என்றாள்.

அது கேட்டு அவர்கள் ''ஆச்சரியமாக இருக்கிறதே! இவ்வளவு அழகான உன்னையா உன் தந்தை கிழவரும் குருடரு



மூவரும் ஒரே உருவம் உடையவர்களாகத் தென் படுவோம். நீ உன் கணவனைத் தேர்ந்துஎடு பார்க்கலாம்'' என்றார்கள்.

அப்போது சுகன்யை ''ஓகோ! நீங்கள் என்னைப் பரீட்சிக்க விரும்புகிறீர்களா? என் பதி விரதா சக்தி என்னை உங்கள் பரீட்சையில் தேர்ச்சி பெறச் செய்து விடும். இதனால் என் கணவருக்கு நன்மை ஏற்படுவதால் இப் பரீட்சைக்கு உட்படுகிறேன்'' எனக் கூறி அவள் சியவனரிடம் விஷயத்தை விளக்கி அவரைக் கையைப் பிடித்து அழைத்து வந்தாள்.

அசுவினி குமாரர்களும் சியவனரும் கைகோர்த்துக் கொண்டு குளத்தில் இறங்கிக் குளித்தார்கள். அவர்கள் கரைக்கு வந்த போது மூவரும் இளம் வாலிபர்களாகவும் ஒரே தோற்றம் உடையவர்களாகவும் இருந்தார்கள். சுகன்யை தன் கணவரை மனதில் எண்ணியவாறே அவர்களில் ஒருவரது கரத்தைப் பற்றினாள். அவரே சியவனர்.

அது கண்டு அசுவினி குமாரர்கள் 'ஆகா' வென வியந்தார்கள். சியவனரும் அசுவினி குமாரர்களின் திறமையைப் பாராட்டி ''உங்களால் எனக்கு வாலிபம் கிடைத்தது. இழந்த

நாங்கள் கொடுக்கிறோம்'' என்றார்கள்.

சுகன்யையும் ''எனக்கு எந்த வரமும் தேவை இல்லை. என் கணவரோடு இப்படியே நான் வாழ்ந்து வந்தாலே அதுவே எனக்குப் போதும்.'' என்றாள் அப்போது அசுவனி குமாரர்கள் ''அம்மணி நீயோ கற்புக்கரசி. உன் கணவரை கிழவராக உன்னோடு நிறுத்திப் பார்க்க எங்கள் மனம் வேதனைப் படுகிறது. நாங்கள் அவரை அழகான வாலிபராக மாற்றுகிறோம். அவரை அழைத்து வாருங்கள். நாங்கள் மூவரும் இந்தக் குளத்தில், குளித்து எழுகிறோம். அப்போது

கண்களையும் பெற்றேன். இப்படியாக உங்களிடமிருந்து உதவி பெற்ற நான் உங்களுக்கு பதில் உபகாரம் ஏதாவது செய்தே ஆகவேண்டும் உங்களது விருப்பம் என்ன? அதை நான் நிறைவேற்றுகிறேன்'' எனக் கூறினர்.

அவர்களும் ''நாங்கள் வைத்தியத் தொழிலை மேற்கொண்டவர்கள் என்ற காரணத்தால் யாகத்தில் நாங்கள் சோமபானம் பெற்று அருந்த அருகதை அற்றவர்கள் என இந்திரன் ஒதுக்கி வைத்து விட்டான். எங்களுக்கு அந்த உரிமை கிடைக்குமாறு நீங்கள் செய்ய வேண்டும்'' என்று சியவனரிடம் வேண்டிக் கொண்டார்கள்.

சியவனரும் ''கவலைப்படாதீர்கள். நான் சர்யாதியிடம் சொல்லி ஒரு யாகம் செய்கிறேன். அப்போது உங்களுக்கு சோமபானம் பருகும் உரிமையை வாங்கித் தருகிறேன்'' என்றார். அசுவினி குமாரர்களும் அவரை வணங்கி விடைபெற்று சென்றார்கள்.

இளைஞரான சியவனர் சுகன்யையுடன் சுகமாகக் காலம் கழிக்கலானர். வெகு நாட்களாகத் தன் மகளைப் பாராமல், இருந்த சர்யாதி மன்னன் அவளைக் காண ஒரு நாள் சியவனரது ஆசிரமத்திற்கு வந்தான். அங்கு



கிழவரான சியவனரைக் காணுமல் ஒரு வாலிபன் இருப்பதையும் அவனோடு சுகன்யை சிரித்துப் பேசிக் கொண்டிருப்பதையும் கண்டு தன் மகளின் நடத்தையை சந்தேகிக்கலானன்.

தன் தந்தை வந்திருப்பது கண்டு சுகன்யை ஓடோடிச் சென்று அவனை வரவேற்றாள். சியவனர் எப்படி இளைஞர் ஆனார் என்பதை அவள் விவரமாகக் கூறவே அவன் மனதில் திடீரெனத் தோன்றிய சந்தேகமும் விலகியது. அப்போது சியவனரும் தான் அசுவினி குமாரர்களுக்குக் கொடுத்த வாக்கைப் பற்றி அவனிடம் கூற சர்யாதி

யும் யாகத்திற்கான ஏற்பாடு களைச் செய்தான்.

சியவனரே முன் நின்று அந்த யாகத்தை நடத்தி வைக்கலானுர். யாகத்தின்போது இந்திரனும் மற்ற தேவர்களும் வந்திருந்தார்கள். அசுவினி குமாரர்களும் வந்திருந்தார்கள். யாகத்தின் போது சியவனர் அசுவினி குமாரர்களுக்கு சோம பானத்தைக் கொடுத்தார்.

அப்போது இந்திரன் எழுந்து ''இவர்கள் மருத்துவர்கள். இத் தொழிலில் ஈடுபட்ட இவர்களுக்கு யாகத்து சோமபானம் பருக உரிமை கிடையாது'' என்று கூறி ஆட்சேபித்தான். அப்போது சியவனர் ''ஏன் இல்லை? நான் இந்த யாகத்தை நடத்தச் சொன்னதே இந்த இருவருக்கும் சோமபானத்தைக் கொடுக்கத்தான். நான் இப்போது கொடுக்கத்தான் போகிறேன் அவர்களும் பருகத்தான் போகிருர்கள் நீயே பார்'' எனக் கூறி அசுவினி குமாரர்களுக்கு சோம பானத்தைக் கொடுத்தார்.

இந்திரனுக்குக் கோபம் வந்து தன் வச்சிராயுதத்தை சியவனரின் மீது பிரயோகித்தான். சியவனர் அதனைத் தன் தவவலிமையால் தடுத்து நிறுத்தி ஹோமம் செய்து கிருத்தியையை ஹோம குண்டத்தில் வரவழைத்தார். அந்த பயங்கரக் கிருத்தியைக் கண்டதுமே இந்திரனும் மற்ற தேவர்களும் நடுநடுங்கி ஓடலாயினர்.

அப்போது தேவ குருவான பிரகஸ்பதி இந்திரனிடம் ''இந்திரா. நீ சியவனரின் காலில் விழுந்து மன்னிப்புக் கேள். இல்லாவிட்டால் இந்தக் கிருத்தியை உன்னை அழித்து விடும்'' என்ருர் இந்திரனும் சியவனரின் கால்களில் விழுந்து வணங்கி மன்னிப்புக் கோரினுன். சியவனரும் கிருத்தியையை திரும்பப்பெறவே, இந்திரன் உயிர் தப்பினுன்.





# வெட்டிப் பயல்கள்

ஒரு கிராமத்தில் ஒரு பணக்காரக் குடியானவன் இருந்தான். அவனுக்கு நான்கு புதல்வர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு ஒரு வேலையும் செய்யத் தெரியாது. வெட்டிப் பொழுது போக்கி வந்தார்கள்.

ஒரு நாள் அவன் தன் முதல் மகனைக் கூப்பிட்டு'' நீ உன் மாமா ஊருக்குப் போய் அங்கு எல்லோரும் சுகமா என்று அறிந்துவா. அந்த ஊரில் ஒரு மண்ணும் கிடையாது. அதனால் அங்கேயே உட்கார்ந்திராமல் மறுநாளே கிளம்பி வந்து விடு'' என்றான். முதல் மகனும் தன் மாமனின் ஊருக்குக் கிளம்பினான். போகும்போது ஒரு மூட்டை நிறைய மண்ணை நிரப்பிக் கொண்டு போனான். அவன் தன் தாய் மாமன் ஊரை அடைந்தான். அவன் ஏதோ மூட்டை கொண்டு வந்தது கண்டு அவனது மாமா ''இது என்னடா மூட்டை?'' என்று கேட்டார். அவனும்'' அப்பா இந்த ஊரில் ஒரு மண்ணும் இல்லை என்றார். கொஞ்சம் மண்ணாவது இருக்கட்டுமே என்று தான் ஒரு மூட்டை கொண்டு வந்தேன்'' என்றான். அது கேட்டு அவன் மாமாவும் மற்றவர்களும் தமக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டனர்.

அவன் ஊர் திரும்பும்போது அவன் மாமா ''தம்பீ, நீ எங்கே போனாலும் ஒரு கெட்டிக் காரனைத் துணையாக அழைத்துப் போ'' என்றார். அவனும் அப்படியே செய்வதாகக் கூறித் தன் ஊருக்குப் போனான். அங்கு தன் மாமன் வீட்டில் நடந்ததை எல்லாம் கூறினான். தந்தையும் ''சரி இனிமேல்

சித. கனகசபை

நீ தனியாகப் போகாதே'' எனக் கூறி விட்டான்.

பிறகு அவன் தன் இரண்டாவது மகனை அழைத்து ''நீ நம் வயலில் போய் குடிசை போட்டு அதில் இந்த வருஷம் இருந்து விவசாயத்தைக் கவனி'' என்றான். அவனும் சரி எனக் கூறித் தந்தையின் வயலுக்குப் போய் ஒரு ஓரமாக குடிசை போட்டுக் கொண்டு இருக்கலானான்.

அந்த வருடம் காட்டில் வேர்க் கடலை போடுவதற்கு விதைக் கடலையை ஓரிடத்தில் வைத்திருந்தார்கள். ஒருநாள் குடியானவன் மகன் பச்சை வேர்க்கடலையை எடுத்து தின்றான். அதைக் கண்ட வேலையாட்கள்'' ஐயா, வேர்கடலையைப் பச்சையாகச், சாப்பிடாதீர்கள் வறுத்துத் தருகிறோம். ருசியாக இருக்கும்'' என்று கூறி கொஞ்சம் கடலையை எடுத்துப் போய் வறுத்து எடுத்து வந்து கொடுத்தார்கள்.

அவனும் அதைச் சாப்பிட்டு விட்டு வெகு ருசியாக இருப்பதைக் கண்டான். அவன் மனதில் ''ஆகா! இவர்கள் கடலையைப் பச்சையாகவே விதைத்து விளைவித்து அதை மறுபடியும் வறுத்துச் சாப்பிடுகிறார்களே. வேர்கடலையை நன்கு வறுத்து அதை விதைத்தால் வறுத்த கடலையாகவே விளையுமே. இந்த வருடம் இதைச் செய்து வழி காட்டுகிறேன்'' என எண்ணிக் கொண்டான்.



பிறகு தன் ஆட்களைக் கூப்பிட்டு விதையாக வைக்கப் பட்டிருந்த அவ்வளவு வேர்க் கடலையையும் வறுக்கும்படி கூறினான். அவர்களோ ''ஐயோ! எல்லாம் வீணாகி விடுமே'' என்று சொன்னார்கள். அவனோ ''நான் உங்கள் எஜமானன். பேசாமல் நான் சொன்னபடிக் கேளுங்கள். எல்லாம் எனக்குத் தெரியும்'' என்றான். அவர்களும் அப்படியே செய்துவிட்டு உடனே அவனது தந்தையிடம் ஓடிப்போய் நடந்ததைக் கூறினார்கள்.

தந்தையும் தன் மகனை உடனே வீட்டிற்கு அழைத்துக்கொண்டு விட்டான். வயலில் விதைக்க வேறு விதைக் கடலையை வாங்கிக் கொடுத்தான். இனி மூன்றுவது மகனைத் திருத்தலாம் என எண்ணி அவனிடம் ''நம் மாட்டுப் பட்டியைப் போய் நீ நன்கு கவனித்துக் கொள். நம் பசு, எருமை முதலியவற்றின் பாலை வேளா வேளைக்குக் கறந்து விற்பனைக்கு அனுப்பு'' என்று அவன் சொல்லி அனுப்பினான்.

அவனுக்குச் சில நாட்களுக்குப் பிறகு ஒரு அபூர்வ யோசனை பிறந்தது. ஒரு நாளில் கொஞ்சம் பால்தானே மாடுகளிலிருந்து கறக்க மு டி கி ற து. கொஞ்ச நாட்கள் பாலைக் கறக்காமல் விட்டு வைத்து பத்துப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு கறந்தால் அவ்வளவு நாட்களும் கறக்காத





பால் எல்லாம் சேர்ந்து நிறையக் கிடைக்குமே என எண்ணினான் அப்படிச் சேர்த்துப் பாலை விற்று நிறைய லாபம் பெறலாம் என எண்ணித் தன் ஆட்களிடம் பொங்கலுக்கு ஒரு மாதத்திற்கு முன்பே பால் கறப்பதை நிறுத்தி விடும்படிக் கூறினான். அவர்களும் அப்படியே பாலைக் கறக்காமல் இருந்து விட்டார்கள்

பொங்கலுக்கு முதல் நாள் பாலைக் கறக்குமாறு மூன்றாவது பையன் தன் ஆட்களிடம் கூறினான். பெரிய பெரிய பாத்திரங்களையும் எடுத்து வரச் சொன்னான். ஆனால் ஒரு மாடும் ஒரு சொட்டுப் பால் கூடக் கொடுக்கவில்லை. மாடுகளின் மடி எல்லாம் வற்றிப் போய் விட்டது. அப்போது குடியானவன் ஆட்களிடம் விசாரித்து நடந்ததை, அறிந்து மூன்றாவது மகனும் உருப்பட வழி இல்லை என வீட்டிற்கு வரச் சொன்னான்.

தன் நான்காவது மகனை அழைத்து ''நீ என்ன தொழில் செய்வதாக உத்தேசம்?'' என்று கேட்டான் அவன் வியாபாரம் செய்வதாகக் கூறவே தந்தையும் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து வியாபாரம் செய்யச் சொன்னான்.

அவனும் அடுத்த ஊருக்குப் போய் பல பொருள்களைப் பார்த்து விட்டு முடிவில் சந்தனக் கட்டைகளை வாங்கி ஒரு வண்டியில் போட்டுக் கொண்டு பல ஊர்களுக்குப் போனான். ஆனால் சந்தனக் கட்டைகளை வாங்குவோர் இல்லை. அவன் ஒரு ஊரை அடைந்து ''இந்த ஊரில் நன்கு விற்பனையாகும் பொருள் எது?'' என்று சிலரிடம் கேட்டான். அவர்களும் கரி தான் எனவே உடனே அவன் தன் சந்தனக் கட்டைகளை எரித்துக் கரியாக்கினான்.

அந்தக் கரியை விற்றதில் அவனுக்குப் பத்து ரூபாய்தான் கிடைத்தது. அந்தப் பத்து ரூபாய்க்கு அடுத்த ஊரில் மலி

வாகக் கிடைத்த பஞ்சை வாங்கி வண்டியில் போட்டு எடுத்துக் கொண்டு ஊர் திரும்பினுன்.

அந்தப் பஞ்சைப் பார்த்தவர்கள் எல்லாம் "பஞ்சை வாங்கலாம் என்ருல் நன்ருக இல்லையே ஒரே தூசியும் காம்பும் சேர்ந்து இருக்கிறது'' என்ருர்கள். அந்தப் பஞ்சு எங்கும் விலை போகாது எனக் கண்டு வண்டியை ஓட்டிக் கொண்டு ஊருக்குத் திரும்பி வரலானுன்.

வழியில் ஒரு வீட்டின் பக்கமாக வண்டியை நிறுத்திவிட்டு இளைப்பாறுவதற்காக அந்த வீட்டின் திண்ணையின் மீது போய் உட்கார்ந்து கொண்டான். அந்த வீட்டின் திண்ணையின் மற்ற ஓரத்தில் ஒரு பொற் கொல்லன் தங்கத்தைப் புடம் வைத்துக் கொண்டிருந்தான். நெருப்பு நன்ருக எரிய ஊது குழலால் ஊதி அடிக்கடி தங்கம் உருகி விட்டதா என்று பார்க்கலானுன்.

அதை கவனித்த குடியானவன் ''என்ன பார்க்கிறீர்கள்?'' என்று கேட்டான். 'தங்கந்தான். அது நெருப்பில் சுத்தமாகி வருகிறதா என்று பார்க்கிறேன்'' என்ருன். அவ்வளவுதான் குடியானவனின் மகனுக்கு ஒரே உற்சாகம் வந்து விட்டது. தன் ஊருக்கு உடனே திரும்பிச் சென்ருன். வண்டியிலிருந்து பஞ்சை எடுத்து வெளியே போட்டான்.

தங்கம் நெருப்பில் சுத்தமாவது போவது பஞ்சும் நெருப்பில் சுத்தமாகி விடும் என்று எண்ணி அவன் அதில் நெருப்பை மூட்டினுன். அதில் நெருப்பு குப்பெனப் பிடித்து எரிந்து பஞ்சு கருகி சாம்பலாயிற்று, அத்தோடு அந்த மகனின் வியாபாரமும் முடிந்தது.

குடியானவன் தன் மகன்கள் எல்லோரும் வெட்டிப் பயல்களே என எண்ணி அவர்களைத் திருத்தும் யோசனையையே அடியோடு விட்டு விட்டான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1980 நவம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**







Brahmdev N. Pakkirisamy

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

★ செப்டம்பர் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.

★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## ஜுலை மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **முத்துப்பல் சிரிப்பு!**

இரண்டாவது போட்டோ: **முல்லைப்பூ விழிப்பு!**

பரிசு பெற்றவர்: **டி. தங்கச்சியம்மாள்,**

நெ-8, திருகுமரநகர், திருநகர், மதுரை—6

பரிசுத் தொகை ரூ. 25ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

Printed by B. V. REDDI at Prasad Process Private Ltd., and Published by B. VISWANATHA REDDI for CHANDAMAMA CHILDREN'S TRUST FUND (Prop: of Chandamama Publications) 188, Arcot Road, Madras-600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# Walt Disney's Grand Parade



# கண்ணை மூடிக்கொள்
# ஆசையை நினைத்துக்கொள்



ஆசைகள் பூர்த்தியடைய முன்னேற்பாடு அவசியம். உன்னுடைய ஆசை என்ன ? புதிய பொம்மையா, பொம்மை வீடா, சைக்கிளா ? உன்னுடைய சொந்த பணத்திலேயே இவைகளையெல்லாம் வாங்க முடியும். எப்படி ?

உனக்காகவே கனரா பாங்க் ஏற்படுத்தியுள்ள **'பாலக்ஷேமா'** டெபாசிட் திட்டத்தில் இன்றே சேமிக்க ஆரம்பிப்பதால். அவ்வப்பொழுது கிடைக்கும் சில்லறைகளை அழகான **பாலக்ஷேமா** சேமிப்புப் பெட்டியில் போட்டு வை. பெட்டி நிறைய, நிறைய பணத்தை அருகில் உள்ள கனரா பாங்கில் உன் கணக்கில் போட்டுக் கொண்டேயிருக்கலாம். நீ ஆசைப்பட்டதை வாங்குகிற அளவிற்கு பணம் வளர்ந்து கொண்டேயிருக்கும் — காரணம், பாங்கு வட்டியும் சேருகிறது.

உன்னுடைய ஆசைகள் நிறைவேற எவ்வளவு சுலபமான வழி ! சேமிக்கப் பழகுவதற்கு எவ்வளவு அற்புதமான முறை !

மற்ற விவரங்களுக்கு அருகாமையிலுள்ள கனரா பாங்கில் இன்றே தெரிந்துகொள்.

மற்ற டெபாசிட் திட்டங்கள் : **காமதேனு, நித்யநிதி, நிரந்தரா.**

## பாலக்ஷேமா டெபாசிட்



## கனரா பாங்க்

(தேசியமாக்கப்பட்ட பாங்க்)
நாடெங்கிலும் 1200க்கும்
மேற்பட்ட கிளைகள் உள்ளன.








## கேம்பா ஆரஞ்சு மணக்குதே-
## நம் எல்லோரையும்
## ஒண்ணு இழுக்குதே

வாழ்வில் மகிழ்ச்சியைத் தருகிறது கேம்பா - இப்போது, அதில் ஆரஞ்சு* சுவை உள்ளது. பருகிடுவீர் கேம்பா அறிந்திடுவீர் அதன் ருசியை - மகிழ்ந்திடுவீர் அதன் மணத்தை - அவர்களைப் போலவே அருந்துங்கள் கேம்பா ஆரஞ்சு*...
இப்போதே.

*ஆர்ட்டிஃபிசியல் ஃப்ளேவர்




ஆரஞ்சு மணம்

CSM/4839